# மொழிபெயர்ப்பு நூற்றொகை

## (1980 முதல் 2005 வரை)

## தொகுதி - 2

முனைவர் இரா. மோகனா




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# மொழிபெயர்ப்பு நூற்றொகை

*(1980 முதல் 2005 வரை)*

## தொகுதி - 2

முனைவர் இரா. மோகனா




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

## நூல்விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | மொழிபெயர்ப்பு நூற்றொகை<br>(1980 முதல் 2005 வரை)<br>தொகுதி - 2 |
| ஆசிரியர் | : | முனைவர் இரா. மோகனா<br>உதவிப் பேராசிரியர்<br>அ.மா. ஜெயின் கல்லூரி, சென்னை.<br>கைப்பேசி : 99401 88470. |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | 773 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல்<br>வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | 16 + 336 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ.160/- (ரூபாய் நூற்று அறுபது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீசரவாண பிரிண்டர்ஸ்<br>144, தம்புத் தெரு<br>சென்னை 600 001.<br>கைப்பேசி : 94442 65471. |
| பாடம் | : | மொழிபெயர்ப்பு |

முனைவர் கோ. விசயராகவன், எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600113

# அணிந்துரை

மொழிபெயர்ப்பு நூற்றொகை எனும் தலைப்பில் உள்ள இந்த நூல் முனைவர் இரா. மோகனா அவர்களால் உருவாக்கப் பட்டுள்ளது. தமிழில் மொழிபெயர்ப்புக் கலை குறித்த வரலாற்றை அறிந்துகொள்ள இந்நூல் துணை செய்யும். இந்நூல் மூன்று பகுதிகளாக பிரிக்கப்பட்டுள்ளது.

பகுதி 1. பிற பகுதிகளிலிருந்து தமிழுக்கு வந்தவை
பகுதி 2. தமிழிலிருந்து பிறமொழிகளுக்குச் சென்றவை
பகுதி 3. மூலநூலாசிரியர்களையும் மொழிபெயர்ப்பாளர் களையும் தொகுத்தளித்த அகரவரிசை

தொடக்கத்திலிருந்து 1979 வரையிலான மொழிபெயர்ப்பு நூல்கள் முனைவர் ச. சிவகாமி அவர்களின் முதல் தொகுதியிலும், 1980 முதல் 2005 வரையிலான 25 ஆண்டுகால எல்லைக்குள் வெளியான மொழிபெயர்ப்பு நூல்கள் முனைவர் இரா. மோகனா அவர்களின் இந்த இரண்டாம் தொகுதியிலும், 2006 முதல் 2013 வரையிலான 7 ஆண்டுகால எல்லைக்குள் வெளியான மொழி பெயர்ப்பு நூல்கள் மூன்றாம் தொகுதியிலும் தொகுக்கப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்பு குறித்த இவரது அறிமுகப் பகுதி தமிழில் மொழி மாற்றம் பெற்றுள்ள மொழிகள் மற்றும் மொழிபெயர்ப்பு நூற்றொகை வரிசை என எழுதிய நூலாசிரியரின் கருத்துக்கள் இந்நூலாசிரியரின் பரந்த நிலை அறிவையும் மொழிபெயர்ப்பு குறித்த இவரது ஆற்றலையும் வெளிப்படுத்துவதாக, மூன்று பகுதிகளிலும் முறையே கட்டுரை, காதை, சிறுகதை, புதினம், பயண இலக்கியம், சமய இலக்கியம் எனுமாறு வகைப்படுத்தியும் தொகைப்படுத்தியும்

இவரது பட்டியலில் ஆண்டுகள் அறியப் படாதவையென பட்டியல் தந்திருப்பது இவர் கொண்டிருந்த முறைமையியலையும் ஆய்வுக் கண்ணோட்டத்தையும் வெளிப்படுத்துவதாக உள்ளது.

சங்க இலக்கிய நூல்கள் பல மொழிபெயர்க்கப்பட்டுள்ள விவரங்களை அறிந்துகொள்ள பகுதி இரண்டு துணை செய்வதாக உள்ளது. இந்தியா மற்றும் உலக நாடுகளில் வாழ்ந்த சிறந்த நூலாசிரியர்களின் நூல்கள் பற்றிய அறிமுகங்கள் இந்நூலாசிரியரால் தரப்பட்டுள்ளன.

கே.ஏ. அப்பாஸ், அருந்ததி ராய், ஆண்டன்செகாவ், இந்திரா பார்த்தசாரதி, இங்கர்சால், ஏங்கெல்ஸ், அய்யப்ப பணிக்கர் என பல்வேறு நூலாசிரியர்களை இந்நூலில் வாசிக்குபோது படித்த நூல்கள் எவை, படிக்க வேண்டிய நூல்கள் எவையென அசையுடன் அசைபோட்டுக் கொள்ள அமைகிறது.

மொழிபெயர்ப்பு நூற்றொகை எனும் இந்நூல் சிறந்த நூல்களைத் தேடிப் படிக்க வழிசெய்வதோடு பல்துறை சான்ற ஆய்வாளர்களுக்கு பல நிலைகளில் வெளிச்சம் காட்டி நிற்கும் கலங்கரை விளக்கம் இந்நூல் எனக் கூறுவது மிகையாகாது.

மருத்துவம், சமூகம், வேதியியல், பொருளியல், மானிடவியல் எனுமாறு தனித்தனித் துறைகளில் நூல்கள் தொகுக்கப்பட வேண்டியுள்ளன எனும் ஆய்வு சார்ந்தச் சமூகப் பொறுப்புணர்வை இந்நூல் வாசிக்கும் அனைவரும் மனங்கொள்ள வைக்கும் தேடலே இந்நூலுக்கு அமைந்த பெரும் வெற்றியாகும்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் தமிழ் மீதும், தமிழர் மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும் வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும்

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றேன்.

தமிழ் வளர்ச்சிக்கும் இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு திரு. கே.சி. வீரமணி அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சியில் எங்களை வழிநடத்திவரும் தமிழ் வளர்ச்சி, மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறேன். இந்த நூலின் எழுத்துருவைத் திருத்திச் செம்மைப்படுத்திய முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் இந்நூலை வடிவமைப்பு செய்த நிறுவன இளநிலை உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி இலட்சுமி, செல்வி தீபிகா லட்சுமணன் அவர்களுக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த சரவணா எண்டர்பிரைசஸ் நிறுவனத்தாருக்கும் என் பாராட்டுகள்.

இயக்குநர்

# நன்றியுரை

ஐந்தாம் நூல் படைப்பிற்கு எனக்கு வாய்ப்புக் கிட்டியது இறையருளேயாகும். இவ்வாய்ப்பினை என்னால் இயன்ற வரை செம்மையான நூலாக்கத்திற்குப் பயன்படுத்தியுள்ளேன்.

மொழிபெயர்ப்பு நூற்றொகை உருவாக்கத்தில் முன்னோடியாக இருந்ததோடு நின்று விடாது, தொகுப்பிற்கு என்னை ஊக்கப் படுத்தியவரும் நூல் நன்முறையில் அமைய பல கருத்துகளையும் அறிவுரைகளையும் வழங்கி நூலாக்க முயற்சியில் விரைவு தேவைகளை உணர்த்தி ஆற்றுப்படுத்தியவரும் இந்நூல் முயற்சிக்கு வித்திட்ட வணக்கத்திற்குரிய என் முன்னாள் நெறியாளருமாகிய முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கு என் நன்றியினை நவில்தலில் பெருமையுறுகிறேன்.

இவ்வாய்வு நூலின் எழுத்துப் பிரதியைப் பார்த்த உடனேயே இந்நூலை இந்நிறுவனத்தில் வெளியிட இசைவு தந்த தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக துணைவேந்தர், மேனாள் இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்கட்கும், இவரைத் தொடர்ந்து இந்நூலை வெளியிட ஒத்துழைப்பு நல்கிய முன்னாள் நிறுவன இயக்குநர் முனைவர் கரு. அழ. குணசேகரன் அவர்கட்கும், நூல் வெளிவர காரணமாய் இருந்த நிறுவன இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கட்கும் நன்றி நவிலக் கடமைப்பட்டுள்ளேன்.

தொகைநூல் ஒன்றினை உருவாக்குவதில் பல இடர்ப்பாடுகள் இருந்தபோதும் எனக்குப் பக்கபலமாக நின்று உதவியவர்கள் பலர்.

நூலைத் தொகுப்பதற்கு இடம் தந்ததுடன் உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூல் நிலையத்தை எனது நூல் நிலையம் போன்று நான் பயன்படுத்தும் அளவிற்கு வாய்ப்பளித்து உதவிய மேனாள் நூலக மேலாளர் பார்வதி, திரு. இரா. பெருமாள்சாமி, திருமதி பி. கவிதா அவர்களுக்கும் ரோஜா முத்தையா, கன்னிமாரா, நூலக மேலாளர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

காலத்தாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது

எனும் குறட்கிணங்க, உரிய காலத்தில் 'திசை எட்டும்' காலாண்டிதழ் களைத் தந்து உதவிய குறிஞ்சிவேலன் ஐயா அவர்களுக்கும் என் நன்றி.

தன் வறுமையை எண்ணாது என் வளமைக்காக பாடுபட்டு நாளும் மெழுகுவர்த்தியாய் ஒளி தந்து என் நினைவில் வாழும் தந்தை ஜி. இராதாகிருஷ்ணன், என் மகிழ்ச்சியை அவருடையதாய் எண்ணி வாழ்ந்து கொண்டிருக்கும் தாய் இரா. ஜானகி அவர்களுக்கு என் சிரம் பணிந்த நன்றிகள்.

இப்பணியின் சுமையால் தளர்வுற்ற பொழுது உன்னால் முடியும் என்ற தன்னம்பிக்கை ஒளியை என் மனதுள் ஏற்றி பல உதவிகளைச் செய்துவரும் என் கணவர் மயிலம் வெ. பாலமுருகன் அவர்கட்கும் நன்றி, என் ஆய்வு பணிகட்கு இடர்தராத முத்துக்களான மகள் மோகனபாலா, மகன் ஜெயவெங்கட கிருஷ்ணன் அவர்கட்கும் நன்றி.

இந்நூலை நன்முறையில் சிறப்பாக கணினி தட்டச்சு செய்து கொடுத்த திருமதி. லட்சுமி மற்றும் செல்வி தீபிகா லட்சுமணன் அவர்கட்கும் அச்சிடும் நிறுவனத்தாருக்கும் பெரிதும் நன்றியுடையேன்.

முனைவர் இரா. மோகனா

## ஆசிரியர் குறிப்பு...



| | | |
|---|---|---|
| பெயர் | : | முனைவர்இரா. மோகனா |
| பிறந்த தேதி | : | 02-05-1982 |
| பிறந்த ஊர் | : | சென்னை |
| கல்வி | : | இளங்கலை & முதுகலை முதல் வகுப்பில் தேர்ச்சி), செல்லம்மாள் மகளிர்க் கல்லூரி, கிண்டி, சென்னை; ஆய்வியல் நிறைஞர், தமிழ்மொழித் துறை, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை; முனைவர் பட்டம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முனைவர் ச. சிவகாமியை நெறியாளராகக் கொண்டு தமிழில் மொழி பெயர்ப்புகள் (1980-2005) என்ற தலைப்பில் மேற்கொண்டு, நெறியாளர் ஓய்வுபெற்றதன் காரணமாக, மாற்று நெறியாளர் முனைவர் சூ. நிர்மலாதேவி அவர்களிடம் ஆய்வு நிறைவு பெற்றது. |
| சிறப்பு | : | 1. புதுதில்லி பல்கலைக்கழக நிதி நல்கைக் குழுவின் விரிவுரையாளர் தகுதித் தேர்வில் தேர்ச்சி (UGC-NET)<br>2. இந்தியில் மூன்று வகுப்பு (இராஷ்டிர பாஷா) வரை தேர்ச்சி |
| நூல் வெளியீடு | : | 1. பயண இலக்கியம், மெய்யப்பன் பதிப்பகம், திசம்பர் 2006.<br>2. இலக்கிய இலக்கணம், மெய்யப்பன் பதிப்பகம், திசம்பர் 2008. |

3. நிகண்டு ஆய்வு, மெய்யப்பன் பதிப்பகம், நவம்பர் 2009.

4. தமிழ் நூல்களில் நிலையாமை, மெய்யப்பன் பதிப்பகம், செப்டம்பர் 2010.

கருத்தரங்க பங்கேற்பு : தேசியக் கருத்தரங்கம் - 24 கட்டுரைகள் எழுதி கட்டுரை வாசித்தல், பன்னாட்டுக் கருத்தரங்கம் - 7 கட்டுரைகள் எழுதி கட்டுரை வாசித்தல்

பணி : நான்கு ஆண்டுகளாக வேலூர் மாவட்டம் திருப்பத்தூரிலுள்ள தூய நெஞ்சுக் கல்லூரியில் விரிவுரையாளராக பணியாற்றினார். கடந்த 1 1/2 ஆண்டுகளாகப் (பிரிவு 2)இல் தமிழ்த் துறைத் தலைவராகவும் மாணவியர்களின் பொறுப்புத் தலைவராகவும் இருந்துவந்தார், 2 ஆண்டுகள் காஞ்சி ஸ்ரீகிருஷ்ணாக் கல்லூரியில் பணியாற்றினார். தற்போது சென்னை அ.மா. ஜெயின் கல்லூரியில் பணியாற்றி வருகிறார்.

# உள்ளடக்கம்

## ஆண்டறியப்படாதவை

## பகுதி - 2

## தமிழிலிருந்து பிறமொழிகளுக்குச் சென்றவை (1980-2005)



## பகுதி - 3

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| என்.சி.பி.எச். | - | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் |
| என்.பி.டி. | - | நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா |
| கழகம் | - | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம். |
| சி.எல்.எஸ். | - | கிறித்தவ இலக்கிய சங்கம் |
| ம.ப. | - | மறுபதிப்பு |
| மூ.ப. | - | மூன்றாம் பதிப்பு |
| ஆ.ப. | - | ஆறாம் பதிப்பு |
| தொகு. | - | தொகுப்பாளர் |
| மொ.பெ. | - | மொழிபெயர்ப்பாளர் |
| மூ. நூ. | - | மூலநூலாசிரியர் |
| I.I.T.S. | - | International Institute of Tamil Studies |
| NBT | - | National Book Trust |
| NCBH | - | New Century Book House |
| CLS | - | Christian Literature Society |

## முன்னுரை

இரண்டாயிரத்திற்கும் முந்தைய ஆண்டுகளில் வாழ்ந்த நம் முன்னோர்களின் இலக்கியம் பற்றிய கருத்துகள், இன்றைய நிலையிலும் மிக நவீனமாகப் பொருந்துவது நம் மொழியின் சிறப்புகளுள் ஒன்றாகும்.

பிறநாட்டு நாகரிகம், பண்பாட்டுக் கலாச்சாரத்தைப் புரிந்துகொள்வது, நம் மொழியின் திறமை, நிறைகுறைகளை ஒப்புநோக்கில் ஆய்ந்து அறிந்துகொள்வது, உள்ளூர் படைப்பாற்றலை உலக அளவில் கொண்டு செல்வது போன்ற அனைத்திற்கும் மொழிபெயர்ப்பு முயற்சிகள் தேவைப்படுகின்றன. அவ்வகையில் முயன்று பெயர்க்கப்பட்ட நூல்களை ஆய்வாளர்களின் ஆய்விற்குப் பெரிதும் பயன்படும்படி ***தொகை நூலாக*** உருவாக்கி அளித்தல் வேண்டும் என்ற உயரிய நோக்கத்தில் உருவானதே மொழிபெயர்ப்பு நூற்றொகை எனும் இந்நூல்.

மொழிபெயர்ப்பு அறிமுகம் எனும் முதல் பகுதி மொழிபெயர்ப்பு பற்றிய சிறு அறிமுகமாகவும், மொழிபெயர்ப்பு வகைகள், கோட்பாடுகள், சிக்கல்கள், தீர்வுகள், பயன்கள், தமிழில் அதன் நிலை போன்றவற்றின் தெளிவாகவும் அமைகின்றது.

தமிழில் மொழிபெயர்ப்பு எனும் இரண்டாம் பகுதி தொல்காப்பியம் துவங்கி இன்று வரை தமிழில் மொழிபெயர்ப்பு பெற்றுள்ள இடத்தினைச் சொல்லி, எத்தனைப் படைப்புகள் இதுவரை வந்துள்ளன. மூலநூலாசிரியர், மொழிபெயர்ப்பாளர், பதிப்பகத்தார் பற்றிய செய்திகளையும் தருகின்றது.

தமிழில் மொழிமாற்றம் பெற்றுள்ள மொழிகள் எனும் பகுதியில் எத்தனை மொழிகளில் இதுவரை நூல்கள் வந்துள்ளன என்பது அட்டவணையாக தரப்பட்டுள்ளது.

'மொழிபெயர்ப்பு நூற்றொகை வரிசை' எனும் பகுதியானது 1980 முதல் 2005 வரை சுமார் இருபத்தைந்து வருடங்களில் வெளிவந்த மொழிபெயர்ப்பு நூல்களின் தொகுப்பாக அமைந்துள்ளது. 1. பிறமொழியிலிருந்து தமிழுக்கு வந்தவை, 2. தமிழிலிருந்து பிறமொழிக்குச் சென்றவை என்ற இருபெரும் கூறுகளுள் நூல்கள் ஆண்டு, மொழி அடிப்படையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

மூல நூலாசிரியர் அகர வரிசை, மொழிபெயர்ப்பாளர் அகரவரிசை இரு பிரிவுகட்கும் தரப்பட்டுள்ளது. சுருக்க விளக்க குறியீடு களும், துணைநூற் பட்டியலும் நூலுள் இடம்பெற்றுள்ளன.

# மொழிபெயர்ப்பு - அறிமுகம்

பிறமொழியிலுள்ள அறிவுச்செல்வங்களைத் தமிழன்னைக்குப் படைக்கவும், தமிழ் மொழிக்குப் பெருமை சேர்க்கும் கூறுகளைப் பிறமொழிகளில் புகுத்தவும் மொழிபெயர்ப்பு ஓர் பாலமாக உள்ளது. மூவாயிரத்துக்கும் மேற்பட்ட மொழி வகைகள் இன்று பயன்பாட்டில் உள்ளன. பல்வேறு மொழி பேசும் மக்களின் கருத்தினையும் உணர்வினையும் அறிந்துகொள்வதற்கு மொழிபெயர்ப்பு ஒரு கருவியாகச் செயல்படுகின்றது. மொழிபெயர்ப்பு தொடர்பான நூல்கள் பல வெளிவந்து கொண்டிருப்பினும் அதனை அனைவரும் அறியும் வாய்ப்புகள் குறைவாகவே உள்ளன.

> *"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில்*
> *பெயர்த்திடல் வேண்டும்"*

எனும் பாரதியின் கூற்றிற்கு இணங்க பலவிதமான மொழி பெயர்ப்பு நூல்கள் வெளிவந்துள்ளன. ஒவ்வொரு மொழியிலும் இன்று சிறப்பிடம் பெற்றுத் திகழும் மொழிபெயர்ப்புகள், இலக்கியம், கலை, அறிவியல் என எல்லாத்துறைகளிலும் அமைந்துள்ளன. அத்தகு மொழிபெயர்ப்பு நூல்கள் பற்றிய செய்திகளைச் சேகரிப்பதும் தொகுப்பதும் மிகவும் கடினமான பணியாகும்.

## *மொழிபெயர்ப்பு - விளக்கம்*

மூலத்தினின்றும் மாறுபடாமலும் படிப்பதற்கு இனிமையாகவும் இருக்குமாறு ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழியில் மாற்றி எழுதும் முறையே மொழிபெயர்ப்பாகும். இது 'மொழி', 'பெயர்ப்பு' என்ற இருசொற்களின் கூட்டுச் சொல்லாக விளங்குகிறது. "மொழி என்பது பேசுவோரின் குரலில் பிறந்து, பொருளுடைய அறிகுறிகளாக அமைந்து கேட்போரால் பொருள் உணரப்படும் ஒலி வகை எனலாம். அது பெரும்பாலும் பேசுவோர், கேட்போர் ஆகிய இருதிறத்தார்க்குமிடையே நிகழ்ந்து ஒருவர் உணர்ச்சியையோ கருத்தையோ மற்றவர் உணர்வதற்குப் பயன்படுவது" (மு. வரதராசனார், மொழிநூல், ப. 1) என்பது அறிஞர் தரும் விளக்கமாகும். பெயர்ப்பு, பெயர்த்தல், பெயர்ச்சி என்பன பொருள் தொடர்புடைய சொற்களாகும். பெயரச் செய்கை, போக்குதல், நிலைமாறச் செய்தல், திருப்பிப் போடுதல், செலுத்துதல், விடுத்தல், இடமாறுகை, இட மாற்றுகை என இவை பல பொருள்படுகின்றன

(Tamil Lexicon Vol. V). Translation எனும் ஆங்கிலச் சொல் லானது 'டிரான்ஸ்பர்ரி' (Transferre) என்ற இலத்தீன் மொழிச் சொல்லை அடியாகக் கொண்டு உருவானதாகும். அம்மொழியில் இச்சொல்லிற்கு எடுத்துச் சொல்வது, கடப்பது, மாற்றுவது, தெரிவிப்பது மொழிபெயர்ப்பது எனப் பொருள் கொள்ளப்படுகின்றது (The Random House Dictionary of the English Language, p. 1505). "ஒரு மொழியில் உள்ளவற்றை மற்றொரு மொழிக்குச் செலுத்துதல், போக்குதல், மொழிபெயர்ப் பாகிறது. 'பெயர்த்தெழுதுதல் என்பதும் மொழிபெயர்ப்பினைச் சுட்டுவதாகும்' (மொழிபெயர்ப்புத் தமிழ், ச. சிவகாமி, ப. 2).

> *"ஒரு மொழியின் கண்ணுள்ள செய்தியை வேறொரு மொழியில் பொருள் வேறுபாடின்றி சுவையும் தன்மையும் குன்றாமல் அப்படியே மாற்றுவதற்கே மொழிபெயர்ப்பு என்று பெயரிடுகிறோம்."*
>
> (மொழித்திறன்களும் சில சிக்கல்களும், மு. கோவிந்தராஜன், ப. 213).

மொழிபெயர்ப்பு என்பது ஓர் நுண்கலை (Fine arts) பாட்டில் பிசிறு தட்டினால் இசை சிறக்காது. நாட்டியத்தில் ஓர் உணர்ச்சிக்குப் பதிலாக வேறோர் உணர்ச்சியை, அபிநயத்தால் நாட்டியம் சிறக்காது. அதுபோல மொழிபெயர்ப்பில் ஒவ்வொரு சொல்லும் அங்கங்கே பொருத்தமாக அமைய வேண்டும் என்று கா.ஸ்ரீ.ஸ்ரீ. கருத்துத் தெரிவித்துள்ளார். பொருளுக்கு முதலிடமும் நடைக்கு இரண்டாமிடமும் தரும் வகையில் மூலமொழிச் செய்திக்கு மிக நெருங்கிய இயல்பான நிகரனைப் பெறும் மொழியில் தருவதே 'மொழிபெயர்ப்பு' என நைடா கூறியுள்ளார்.

எந்த ஒரு மொழிபெயர்ப்பும் அதன் கருத்தினைக் கவர்ச்சியினை எடுத்துச் சொல்ல முடியாது. மொழிபெயர்ப்பு என்பது வெள்ளியிலான வேலைப்பாட்டில், தங்க நிற ஆப்பிளை உருவாக்குவது போன்றது என கிரேண்ட் கூறியுள்ளார். இவை போன்றவை மொழிபெயர்ப்பு குறித்த அறிஞர்கள் கருத்துக்களாம்.

"The Random House Dictionary of the English Language" என்ற அகராதி 'ஒரு மொழியில் கூறியவற்றை எழுதியவற்றை மற்றொரு மொழியில் கூறல்' என மொழிபெயர்ப்பு என்ற சொல்லிற்கு விளக்கமளிக்கிறது. இக்கருத்துக்களை எல்லாம் நோக்கும்போது மொழிபெயர்ப்பு ஓர் அரிதான செயல் என்பது புலப்படுகின்றது.

# மொழிபெயர்ப்பின் இயல்பு

ஒரு மொழிபெயர்ப்பு அறிஞர்களுக்கு மட்டுமல்ல சாதாரண மக்களுக்கும் புரியக்கூடியதாய் இருக்க வேண்டும். மூலப் படைப்பைப் போன்று மொழிபெயர்ப்பு எளிமையாக இருக்க வேண்டும். மூலப்படைப்பைப் போன்று மொழிபெயர்ப்பு எளிமையாக இருக்கவேண்டும். மூலநூல் எந்த அளவிற்கு அம்மொழி வாசகரைப் பாதித்திருக்குமோ அந்தளவிற்கு மொழிபெயர்ப்பென்பது படிப்போரைப் பாதிக்கச் செய்யவேண்டும்.

1. மொழிபெயர்ப்பென்பது மூலநூலின் சொற்களைக் கொண்டிலங்க வேண்டும்.

2. மொழிபெயர்ப்பு ஒரு மூலநூல் போன்று தோற்றமளிக்க வேண்டும்.

3. ஒரு மொழிபெயர்ப்பு மூலநூலின் நடையினைப் பிரதிபலிக்க வேண்டும்.

*"மொழிபெயர்ப்பு மூலநூலை ஒட்டிய காலத்தைச் சார்ந்தது போல் தோற்றமளிக்க வேண்டும்"*

(மொழிபெயர்ப்பியல், ப. 13)

என்றும் கருதுகின்ற நிலை வியப்பினைத் தருகிறது.

ஒரு மொழிபெயர்ப்பு மொழிபெயர்ப்பு போன்று அமைய வேண்டும். மூலத்தின் எண்ணத்தை வழங்க வேண்டும். மொழிபெயர்ப்பாளனின் காலத்தை ஒட்டியதாக இருக்க வேண்டும். இக்கருத்துகள் மேற்சொன்னவற்றிற்கு மறுப்பாக கூறப்பட்ட செய்திகளாகும்.

இவற்றிலிருந்து பெறப்படுவது, மூலநூலின் உணர்வை மொழிபெயர்ப்பு பிரதிபலிப்பதோடு, மூலத்திலிருக்கின்றதைக் கூட்டாமலும், குறைக்காமலும் சொல்ல வேண்டும் என்பதாகும்.

# மொழிபெயர்ப்பின் தேவையும் நோக்கமும்

1. மொழியின் தேவை எந்த அளவிற்கு முக்கியத்துவம் பெற்றதோ, அந்த அளவிற்கு மொழிபெயர்ப்பின் தேவையும் முக்கியத்துவமுடையது.

2. ஒரு நாடு தனது சிந்தனை வளத்தால் அச்சிந்தனை வளத்தினையும் அறிவியல் ஆக்கத்தினையும் முழுமையாகப் பெற மொழிபெயர்ப்பு தேவைப்படுகிறது.

3. மனித சமுதாய மேம்பாட்டிற்கு மொழிபெயர்ப்பு என்ற அரிய கலை இன்றியமையாதது.

எனக் கருதியே பாரதியார்,

*சென்றிடுவீர் எட்டுத்திக்கும் – கலைச்*
*செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்*

என்று நமக்கு உத்தரவிடுகிறார்.

அறிவுப் பசியால் உழன்று கொண்டிருக்கும் மனித சமுதாயத்திற்கு மொழிப் பிரச்சனை ஒரு தடையாக இருக்கக் கூடாது எனும் நோக்கத்தினை மொழிபெயர்ப்பு கொண்டுள்ளது. அதன் காரணமாகவே இன்று பலவிதமான பெயர்ப்புகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.[1] மொழிபெயர்ப்புத் துறையில் இதழ்கள் சிறந்த பங்கினை ஆற்றுகின்றன. மேலும் கருத்து வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொள்ளுதல் அறிமுகங் கொள்ளுதல் எனும் இவையே மொழி பெயர்ப்பின் நோக்கங்களாக அமைகின்றன.[2] கருத்து வளர்ச்சி, அறிவு வளர்ச்சி போன்றவை அறிவியல், பொருளாதாரம், வரலாறு, புவியியல் போன்ற மொழிபெயர்ப்புகளில் முதன்மையாகின்றன.[3] ஒருவரை யொருவர் அறிமுகம் கொள்வதனையும், புரிந்து கொள்வதனையும் இலக்கியம், கலை மொழிபெயர்ப்புகள் அடிப்படையாகக் கொள்கின்றன.[4] மொழிபெயர்ப்பின் மிக முக்கிய நோக்கங்களில் ஒன்று நாடுகளுக்கிடையே நட்புறவையும், பிணைப்பையும் ஏற்படுத்துவதாகும். எந்தவொரு செயலும் ஏதாவதொரு இலக்கினை மையமாகக் கொண்டே செய்யப்படும். எந்தவொரு செயலின் நோக்கமும் நிறைவேறிவிட்டால் அதாவது நல்ல விளைவுகளை ஏற்படுத்தினால் அதனைப் பயன் என்று சொல்லலாம்.

சிறந்த கதைகள் என்று இலக்கிய விமர்சிகர்களால் பாராட்டப் பெற்றவற்றை மொழி பெயர்க்க வேண்டும் என்பது நோக்கமாக அமைகின்றது.[5] பாமர மக்களுக்கும் அறிவைப் பரப்ப வேண்டுமென்ற நோக்கம் மொழிபெயர்ப்பு மூலமாகச் செயல்படுகின்றது.[6] மக்களின் பண்பாட்டை நமக்கு இனங் காட்டுதல் இலக்கிய வகைகளின் வழியாக அறிவினை ஊட்டுவதும் நோக்கமாகக் கொள்ளப்படுகிறது.

மொழிபெயர்ப்பின் பணி பரந்து விரிந்தது அப்பணியின் நோக்கங்கள் பலவாறாக அமைகின்றன. அந்நோக்கங்களில் சிறந்த ஒன்றாக அமைவது ஒரு மொழியை அதே மொழியைக் கொண்டு வளர்க்காமல் இன்னொரு மொழித்திறன் கொண்டு வளர்ப்ப தாகும்.[13] ஒவ்வொரு மொழிபெயர்ப்பும் மூலநூலின் உணர்வினைப் பிரதிபலிப்பதாக அமைய வேண்டுமென்பது மொழிபெயர்ப்பின் விளக்கமாக மட்டுமல்லாமல் நோக்கமாகவும் அமைகிறது.

> *ஒரு மொழியின் இலக்கிய வளர்ச்சியாவது, அந்தந்த இலக்கியத்தின் மொழிபெயர்ப்பின் வளர்ச்சியினையும் பொறுத்து அமைவதாக அறிஞர் கருதுகின்றனர். இந்நிலையைக் காணுகின்ற போது, மொழிபெயர்ப்புகள் இலக்கியத்தைப் பாதிக்கின்றன எனலாம். எவ்வாறெனில் அவை இலக்கியத்தினை வழிப்படுத்தவும் வரைப்படுத்தவும் செய்கின்றன. இதையே மொழிப்பெயர்ப்பின் நோக்கங்களில் ஒன்றாகச் சுட்டலாம்.*

(மொழிபெயர்ப்பியல், சு. சண்முகவேலாயுதம், ப. 37).

மொழிபெயர்ப்பாளர்களும் தங்களுக்கெனத் தனித்த நோக்கங்களைக் கொண்டு மொழிபெயர்த்தலும் காணப்படுகிறது. சான்றாக எண்டமூரி வீரேந்திரநாத் தெலுங்கிலும், தகழி சிவசங்கரன் பிள்ளை மலையாளத்திலும், எஸ்.எல். பைரப்பா கன்னடத்திலும், தாகூர் வங்காளத்திலும், பிரேம்சந்த் ஹிந்தியிலும், டால்ஸ்டாய் ஆங்கிலத்திலும் தங்களை முன்னிறுத்துவதற்காக பல்வேறு படைப்புகளைப் படைத்துள்ளமையைச் சுட்டலாம். நிறுவனங்களும் இத்தகு நோக்கங்களுடன் செயல்படுதல் காணப்படுகிறது. சான்று, சாகித்திய அக்காதெமி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், நேஷனல் புக் டிரஸ்ட் போன்றவற்றைச் சுட்டலாம்.

பொதுநிலையில் நோக்குங்கால் மொழிபெயர்ப்புகள் எத்துறையில் எழுவதாயினும் ஏதேனும் பயன்பாட்டு நோக்கத்துடனே எழுவதும் காணப்படுகிறது. இதனால் மொழிபெயர்ப்பின் தேவை புலனாகும்.

### மொழிபெயர்ப்பு – தோற்றம், வளர்ச்சி

வேற்றுமொழிகளில் பயின்று வரும் கலைப்பொருளைச் செந்தமிழில் மொழிபெயர்த்து தரும் வழக்கம் தமிழிற்குப் புதியதன்று தொல்காப்பியர் காலந்தொட்டே பெயர்ப்பு இருந்துள்ளதை,

*தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்*
*ததர்ப்பட யாத்தலோ டனைமரபினவே*

எனும் தொல்காப்பிய நூற்பா விளக்குகின்றது.

உலகில் உள்ள இலக்கிய வரலாற்றைப் பார்க்கும்போது கிரேக்க, இலத்தீன் மொழிகள் மொழிபெயர்ப்பிற்கு அதிக இடமளித்துள்ளன. சான்றாக முதன்முதலில் கிரேக்க மொழியிலிருந்து இலத்தீன் மொழிக்கு ஹோமருடைய ஒடிசியை லிவியஸ் அன்டோனிகஸ் கி.மு. 250இல் மொழிபெயர்த்தார். 8, 9ஆம் நூற்றாண்டுகளில் அரேபியாவில் கல்வி வளர்ச்சி அடையத் தொடங்கியது. இதன் விளைவாகப் பல கிரேக்க, இலத்தீன் இலக்கியங்கள் அரேபிய மொழிக்குப் பெயர்க்கப்பட்டன. அச் சூழலில் அரேபியத் தலைநகரான பாக்தாத் மொழிபெயர்ப்பின் மையமாக விளங்கியது.

கி.பி. 12ஆம் நூற்றாண்டு மொழிபெயர்ப்பின் வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் அடிகோலியது அரேபிய மொழிபெயர்ப்புகள் என்பது சுட்டத்தக்கது. இந்நூற்றாண்டில் ஜெரோட் ஆப் கிராமனா என்பவர் மொழிபெயர்ப்புப் பணியில் தீவிரமாக ஈடுபட்டு வந்தார். இவர்தான் மொழிபெயர்ப்பின் முன்னோடியாகவும் திகழ்ந்தார். அறிவியல் படைப்புகளை கிரேக்க, அரேபிய மொழிகளிலிருந்து இலத்தீன் மொழிக்குப் பெயர்த்த பெருமையும் இவரையே சாரும்.

கி.பி. 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மொழி பெயர்ப்பு தொடர்பான விளக்கங்களை ஆங்கில அறிஞர்களை விட பிரெஞ்சு நாட்டினர் சிறப்பான முறையில் விளக்கிச் சென்றனர். மேலும் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் மொழிபெயர்ப்புத் தொடர்பான கொள்கைகள், கோட்பாடுகள் குறித்து சிலர் விளக்கத் துவங்கினர். இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் மொழிபெயர்ப்பியலில் பல மாற்றங்கள் செய்ய வேண்டியதாயிற்று. பைபிள் ஐரோப்பிய மொழிகள் பலவற்றிலும் மொழிபெயர்க்கப்பட்டது. இதனைத் தொடர்ந்து வந்த மொழிபெயர்ப்புகள் எல்லாம் சமயம் தொடர்பான கருத்துகளுக்கு மட்டுமே என்ற எண்ணம் உருவாக ஆரம்பித்தது. அதன் பின்னரே மொழிபெயர்ப்பில் மாறுதல்கள் ஏற்படத் தொடங்கின.

கிபி 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பல மொழிபெயர்ப்புகள் தோன்றின. இந்நூற்றாண்டின் இடைக்காலத்தில் பல துறைகளிலும் சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. இவ்வாறு தோன்றிய சீர்திருத்தங்கள் கிறித்துவ மத சபைகளிலும், பாராளுமன்றத்திலும் ஏற்படத் தொடங்கின. குறிப்பாக இலக்கியங்களிலும், இலக்கியக்

கொள்கைகளிலும் புதிய அணுகுமுறைகளும் உத்திகளும் பயன்பாட்டில் வரத்தொடங்கின. இந்தக் காலக்கட்டத்தில் மொழி பெயர்ப்பிலும் பல மாற்றங்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது.

18ஆம் நூற்றாண்டில் மொழிபெயர்ப்பு மிகவும் சிறப்பான இடத்தைப் பெற்றது. இந்த நூற்றாண்டில் மொழிபெயர்ப்பாளர் ஒரு பெயிண்டராகவோ அல்லது போலச்செய்பவராகவோதான் கருதப்பட்டார். ஏனெனில் மொழிபெயர்ப்பாளர் என்பவர் மூலத்தில் உள்ளதை அப்படியே குறிக்கோள் மொழியில் கொண்டு வரும் பணியைச் செய்பவர் என்று கருதப்பட்டதேயாகும். இலக்கியங்களை மொழிபெயர்க்கும்போது மூலமொழியிலுள்ள விறுவிறுப்பு குறிக்கோள் மொழியிலும் அமைய வேண்டும் என்ற கொள்கை இந் நூற்றாண்டில் முழுமனதாக ஏற்றுக்கொள்ளப் பட்டது. நியூமேன், கார்லே, வில்லியம் மோரிஸ் போன்றோர் மொழிபெயர்ப்புத் துறையில் குறிப்பிடத்தக்கவராவர்.

கி.பி. 19ஆம் நூற்றாண்டில்தான் மொழிபெயர்ப்புத் தொடர்பாக விளக்கங்கள் கூறப்பட்டன. ஏற்கனவே உள்ள விளக்கங்களையும் கொள்கைகளையும் அடிப்படையாகக் கொண்டு அவை பெரும்பாலும் அமைந்திருந்தன. ஜெர்மன் மொழி இலக்கியங்கள் பல ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டன.

மொழிபெயர்ப்புத்துறை அதற்கென ஒரு நிலையான இடத்தைப் பிடித்தது 20-ஆம் நூற்றாண்டில்தான். இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் உலக மொழிகள் பலவற்றிலிருந்து மொழிபெயர்ப்புகள் வெளிவரத் தொடங்கின. எனவே இந்நூற்றாண்டினை மொழிபெயர்ப்பின் பொற்காலம் என அழைப்பர். இவ்வகையான வளர்ச்சிக்கு வித்திட்டவர் டெய்லரின் என்பவராவர். 1931இல் இவர் 'மொழிபெயர்ப்பியல்' என்ற தலைப்பின் கீழ் ஒரு சொற்பொழிவை நிகழ்த்தினார். இது மொழிபெயர்ப்புத் துறையில் சிறப்பான இடத்தைப் பிடித்தது. மேலும் பல நடைமுறைச் சிக்கல்களுக்குத் தீர்வுகாண அவருடைய சொற்பொழிவு மிகவும் பயனுள்ளதாக அமைந்திருந்தது. இருபத்தோராம் நூற்றாண்டில் மொழிபெயர்ப்பின் தரம் மேலும் வளர்ந்துள்ளமைக் கண்கூடு. வரும் காலங்களிலும் இதன் வளர்ச்சி மேன்மையுறுதல் வெள்ளிடை மலை.

### *மொழிபெயர்ப்புக் கோட்பாடுகள்*

ஒரு துறையின் வளர்ச்சி நிலை கருதி வகுத்துக் கொள்ளப்படும் செயல் விதிமுறைகள் கோட்பாடுகள் எனக் குறிப்பிடுகிறது. மொழிபெயர்ப்புப் பணியில் பின்பற்ற வேண்டிய பொது விதிகள் மனங் கொள்ள வேண்டிய சிறப்பு விதிகள் முதலியன மொழிபெயர்ப்பியல் கோட்பாடுகளாகின்றன.

***ஒரு செயல்முறை (Process) அல்லது நிகழ்வில் (Phenomenon) மேற்கொள்ளப்படும் அல்லது உள்ளமைவாக இயங்கும் பொதுவான விதிமுறைகள் என்று முறையாக எடுத்துச் சொல்லப்படுவனவற்றை அந்தச் செயல்முறை அல்லது நிகழ்வு தொடர்பான கோட்பாடுகள் (Theory) என்கிறோம். ஓர் அறிவுத்துறை செயல்படும் விதத்தில் காணப்படும் அல்லது செயல்படுவதற்காக வகுக்கப்படும் பொதுவிதிகளை அத்துறை சார்ந்தக் கோட்பாடுகள் என்கிறோம்.***

மொழிபெயர்ப்பியல் கோட்பாடுகளும் உத்திகளும், ப. 8

### *கோட்பாட்டின் தேவை*

மொழிபெயர்ப்புப் பணியில் பல்வேறு துறைகளின் வளர்ச்சி உள்ளடங்கியுள்ளது. வெவ்வேறு இயல்புகளைக் கொண்ட மொழிகளுடன் தொடர்புடையது. வெவ்வேறு தன்மைகளைக் கொண்ட படைப்புகளுடன் செயல்படுவது. மொழிபெயர்ப்பைப் பற்றிக் கருத்துரைக்கும் அறிஞர்களில் ஒரு சாரார், மொழிபெயர்ப்பு ஒரு கலை என்றும் மற்றொரு சாரார் மொழிபெயர்ப்பு ஒரு அறிவியல் என்றும் வகுத்துரைக்கின்றனர்.

காலப்போக்கில் ஒரு துறை, சம்பந்தப்பட்டவர்களின் அனுபவங் களுக்கேற்பவும், அறிவு வளர்ச்சிக்கேற்பவும், தேவைகளுக்கேற்பவும், சூழ்நிலைகளுக்கேற்பவும் விதிகள் மாறலாம் அல்லது மீறப்படலாம். ஆனால் ஒரு துறையின் செயல்பாட்டிற்கென்று பொதுவானக் கோட்பாடுகள் தேவை என்ற நோக்கில் மொழிபெயர்ப்பியலுக்குக் கோட்பாடுகள் வகுப்பது அவசியமாகிறது.

### *முரண்பாடு தவிர்த்தல்*

மூலநூலின் கருத்துகளை மற்றொரு மொழிக்கு மாற்றுதல் என்ற நிலையில், மூலநூலின் கருத்துகளில் சிறிதும் மாறுபாடு இருத்தல் மிக இன்றியமைந்ததாகும். அவற்றுள் முரண்பாடு ஏற்படின் மொழிபெயர்ப்பின் நோக்கம் தடைபடும். மொழிபெயர்ப்பில் முரண்பாடுகள் தோன்றின் அவை தவறான கருத்துகளை மாற்று மொழியினருக்கு அறிமுகப்படுத்துவதோடு மொழிபெயர்ப்பினின்று மாறி தழுவலாகி விடும்.

### *எளிமை*

ஒரு மொழிக்கருத்தினை மற்றொரு மொழியினருக்கு அறிமுகப்படுத்துதல் என்ற நிலையில் இது மிகுதியாக வேண்டப் படுகிறது. மொழிபெயர்ப்பு நடை கடினமானதாக இல்லாமல் யாவர்க்கும்

புரியும்வண்ணம், எளியச் சொற்களால் எளியத் தொடராக அமைந்திருத்தல் வேண்டும். கற்பாருக்கு நூலைப் படிக்கும்போது அது மொழிபெயர்ப்பு நூல் என்ற உணர்வு தோன்றாது மூலநூலைப் படிப்பதைப் போன்ற உணர்வும் எளிமையும் இருத்தல் வெற்றியாகும். பாரதியாரின் 'பாஞ்சாலிச் சபதம்' இதற்குச் சிறந்த சான்றாகும்.

### *தெளிவு*

மூலநூலின் மிக நீண்ட தொடர்களை ஆங்காங்கே எளிய தொடர்களாக்கியும் தெளிவாக மொழிபெயர்க்கலாம். மூலநூலார் பயன்படுத்தியிருக்கும் கடினமான பதங்களையோ அதன் மொழிபெயர்ப்பினைப் படிப்போர் அறியாத சில மரபுச் சொற்றொடர்களையோ பொருட்களையோ பெயர்க்க வேண்டிவரின் அவற்றைக் கற்பார் அறிந்த வழக்கு மொழிகளில் தருவதில் தவறில்லை.

மொழிபெயர்ப்பு நூல்கள் அனைத்திலும் தெளிவு வேண்டுவதாயினும் அறிவியல், கலைகள், சட்டம், மருத்துவம் போன்ற துறைகளில் மிகவும் இன்றியமையாததாகின்றது. இரட்டைப் பொருள் தரும் சொல், தொடர் போன்றவற்றை விலக்கி, கற்பாருக்கு எளிதில் புலனாகக் கூடியவாறு அவர்களுடன் தொடர்புடைய சொற்களையே பயன்படுத்தல் வேண்டும். இதனால் பொருள் மயக்கம் தவிர்க்கப்படும். மொழிபெயர்ப்பில் அலங்காரத்தையும் ஆடம்பரத்தையும் களைதல் நலமாகும்.

### *விளக்கங்கள்*

ஒவ்வொரு மொழிக்கும் என்று தனித்த சிறப்புக் கூறுகள் உண்டு. ஒன்றன் சிறப்பு மற்றொன்றில் உறுதியாக இருக்கும் என்று கூறுவதற்கில்லை. அந்தந்த மொழியினரின் மரபு, பழக்கவழக்கம், சூழல் இச்சிறப்பினைத் தோற்று வைக்கின்றன. இத்தகு சூழல்களில் அச்சொற்களை அப்படியே தந்துவிட்டு அவற்றிற்குத் தேவையான விளக்கங்களை அடிக்குறிப்பில் தரல் வேண்டும்.

மொழிபெயர்ப்பாளர் தம் மொழிபெயர்ப்பின் முகவுரையில் மூலநூலினைப் பற்றியும் மூலநூலாசிரியர் பற்றியும் எந்த மொழியில் அமைந்தது என்பது பற்றியும் ஒரு சிறந்த அறிமுகம் தரல் கற்பாருக்குப் பேருதவியாக இருக்கும்.

கொள்கைகள் ஒரு முடிந்த முடிபிற்கு நம்மை இட்டுச் செல்ல வேண்டும். அவ்வகையிலே நோக்கும்போது மொழி பெயர்ப்பைப் பொறுத்த அளவில் நாம் சில கொள்கையினை மேற்கொண்டு செயல்படுத்தினாலும் மொழிபெயர்ப்பென்பது இவ்வாறாகத்தான் அமைய வேண்டும் என்ற முடிந்த முடிபினை தரமுடிவதில்லை. அதற்குக்

காரணமாக இருப்பது மொழி பெயர்ப்பாளர்களிடையே இருக்கின்ற தனித்த குணங்களேத் தவிர வேறல்ல.

*ஒவ்வொரு மனிதனின் மனநிலையையும் கருத்தில் கொண்டால், மொழிபெயர்ப்பு என்பதற்கு முடிவே இருக்காது - பிஷப்பேன்கிராப்ட்*

ஒவ்வொரு ஆசிரியருக்கென்றும் சில தனித்த கொள்கைகள் உண்டு. 1. மூலநூலை மொழிபெயர்ப்புடன் தரல். 2. முன்னே குறிப்பிட்ட நூலுக்கு மொழிபெயர்ப்பிருக்கத் தானும் புதிதாகத் தரமுனைதல் மூலநூலை மொழிபெயர்ப்புடன் தரல் என்பதற்குப் பாரதிதாசனின் அழகின் சிரிப்பைச் சான்றாக்கலாம். முன்னே குறிப்பிட்ட நூலுக்கு மொழிபெயர்ப்பிருக்கத் தானும் புதிதாகத் தர முனைதல் என்பதற்குத் தாகூரின் கீதாஞ்சலி யினையும், 1001 அரபுக் கதைகளையும் சான்றாக்கலாம்.

### *மொழிமரபு*

ஒவ்வொரு மொழியிலும் அந்தந்த மொழிக்கேயுரிய தனிச்சிறப்பு வாய்ந்த சில மரபுகள் உள்ளன. இலக்கணப் பொருள், குறியீடு, படிமம், தொன்மம், பழமொழி, புராணம், இணைக்கதைகள் முதலியவை அந்தந்த மொழியின் மரபை நன்கு விளக்கும். இவற்றைத் தெரிந்து கொண்டு மொழிபெயர்ப்பாளர் பெயர்ப்பு செய்ய வேண்டும்.

நேர் மொழிபெயர்ப்பு, சுருக்கம், மொழிபெயர்ப்பாளர் இடையீடு, தழுவல் எனும் நான்கு நிலைகளில் மொழிபெயர்ப்பு மரபு அமைகிறது என ச. சிவகாமி கூறுகிறார்.

நேர் மொழிபெயர்ப்பு, சுருக்கம், மொழிபெயர்ப்பாளர் இடையீடு, தழுவல் போன்றவற்றோடு மொழி மறுபடைப்பு என்பதையும் சேர்த்து மொழிமரபு ஐந்து என மு. வளர்மதி தந்துள்ளார்.

மூலநூலினின்று சிறிதும் மாற்றம் கொள்ளாது. அதவை அவ்வாறே மொழி மாற்றம் செய்பவை நேர்மொழிபெயர்ப்பாகும் சான்று.

இதில் மொழிபெயர்ப்புத் தவிர மொழிபெயர்ப்பாளருக்கு வேறு வேலை இல்லை. இந்நிலை மொழிபெயர்ப்பு இருவகையாகச் செய்யுள் இலக்கியங்களில் அமைகிறது. செய்யுள் வடிவத்தினைச் செய்யுள் வடிவத்திலேயே தரல் ஒன்று. உரைநடை வடிவத்தில் தரல் மற்றொன்று. உரைநடையில தருவதினால் செய்யுள் மொழி பெயர்ப்பில் தோன்றும் இடர்ப்பாடுகள் சில தோன்றுவதில்லை. இவற்றுள்ளும் சில உரைநடையும் ஆங்காங்கே கவிதை வடிவமும் பெற்றமைதல் உண்டு. சொல்லுக்குச் சொல்லாக மொழிபெயர்த்தலும் இதனுள் அருகிக் காணப்படுகிறது.

மூலநூலின் முழுச்சுவையையும் இதனால் அளிக்க இயலாவிடினம் அந்நூலினைப் பற்றி அறிந்து கொள்வோம் எனும்

உணர்வினைப் பெறமுடியும். எனவே மூலத்தின் சிறந்த பகுதிகள், தேவையான பகுதிகள் அனைத்தும் விடுபடாதவாறு பார்த்துக் கொள்ளுதல் மொழிபெயர்ப்பாளரின் கடமையாகிறது. இலக்கியங்களின் சுருக்க மொழிபெயர்ப்புகள், கவிதை (அ) உரைநடை (அ) இரண்டும் இணைந்த நிலை அமைதலும் உண்டு. முழுமையாக நூலினைப் படிக்க இயலவில்லையே என்று கற்பாரை எண்ணத் தூண்டும் வகையில் அமைத்தல் இத்தகைய நூல்களில் மொழிபெயர்ப்பாளர் பெறும் வெற்றியாகும்.

மூலநூலின் சிறந்த பகுதிகள், தேவையான பகுதிகள் மட்டும் மொழிபெயர்த்தல் சுருக்க மொழிபெயர்ப்பாகும்.

மொழிபெயர்ப்பாளர் இடையீடு என்பது மூலநூலை மொழிபெயர்க்கும் போது மொழிபெயர்ப்பாளர் கருத்தினை மட்டும் மனத்தில் கொண்டு பெயர்க்கப்படும் மொழிக்கு ஏற்ப செய்யும் சில மாற்றங்களாகும். அதாவது பாத்திரங்கள், நிகழ்ச்சி நடைபெறும் இடங்கள் போன்றவற்றினை மொழிபெயர்க்கப்படும் மொழிக்கு ஏற்ப மாற்றித் தருதலாகும். இதன் நோக்கம் மொழி பெயர்ப்பு அன்று எனும் உணர்வினைத் தருதலும், எளிமையாக்கித் தருதலும் ஆகும். மொழிபெயர்ப்பாளர் இடையீட்டில் இதனை முதல் வகையாகக் கருதலாம். இரண்டாவது வகை, மொழி பெயர்ப்பாளர் ஆங்காங்கே மூலநூலினைத் தம் விருப்பம்போல் மாற்றிக் கொள்ளுதலாகும். மொழிபெயர்ப்பில் தன் புலமையை வெளிப்படுத்த வேண்டும் எனும் மொழிபெயர்ப்பாளனின் நோக்கம் இத்தகைய நூல்களின் எழுச்சிக்குக் காரணமாக அமைகின்றது.

முற்றிலுமாக மூலத்தினின்று மாறுபட்டு அமைவது தழுவலாகும்.

> *ஒரு கட்டுரையைக் கவிதையாக மொழிபெயர்த்தாலும் ஒரு கவிதையை, செய்யுளை உரைநடையில் மொழி பெயர்த்தாலும் அதுவும் தழுவலே என்பாரும் உளர்*
>
> (வீ.சந்திரன், மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும், ப. 89)

ஆசியஜோதியும் உமர்கய்யாம் பாடல்களும் (எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களாலும், வி.ஆர்.எம். செட்டியார் அவர்களாலும் மொழிமறுபடைப்புகளாக பாராட்டப்பட்டுள்ளன.

நேர்மொழிபெயர்ப்பு, சுருக்கங்கள் இவ்விரு மரபுகளும் எல்லாத்துறைகளிலும் காணலாம். மொழிபெயர்ப்பாளர் இடையீடு, தழுவல் இவ்விரு மரபுகளும் இலக்கியங்களில் மட்டுமே காணப்படுகின்றன.

தழுவல் மொழிபெயர்ப்புகளில் ஏறக்குறைய மொழிபெயர்ப்பாளர் மூலநூலாசிரியராகவே செயல்படுகிறார் என்பது பெறப்படுகிறது.

### மொழிபெயர்ப்பு வகைகள்

மொழிபெயர்ப்பை வகைப்படுத்துகின்ற நிலையிலே ஒவ்வொருவரும் அவரவரின் கருத்திற்கிணங்க செயல்படுகின்ற தன்மையினைக் காணலாம். மொழிபெயர்க்கின்ற பணியினை காழி. சி. கண்ணுசாமி, "மொழிமாற்று", "மொழிபெயர்ப்பு" என இருவகைப் படுத்துகின்றார்.

மொழி மாற்றல் என்பது எடுத்துக்கொண்ட ஒரு தொடரையோ பகுதியையோ அதன் கண்ணுள்ள ஒவ்வொரு சொல்லையும் அளவாக எடுத்து ஏற்றதோர் மறுமொழிச் சொல் அமைத்து மாற்றித் தருதலாகும். இதனால் எடுத்துக்கொண்ட பொருளின் நுட்பமும் நயமும் கெடாது மொழிமாற்றப்படுதல் அரிதினுமரிதாகும். (மு. கோவிந்தராஜன், மொழித்திறன்களும் சில சிக்கல்களும், ப. 231).

மொழிபெயர்ப்பென்பது எடுத்துக்கொண்ட பொருளினைத் தெள்ளத்தெளிவென விளக்கிச் சிறிது கூட்டியும் குறைத்தும், விரித்தும் அமைக்கலாம் என்பது பலர் கருத்தாக விளக்குகின்றது. காழி. சிவ. கண்ணுசாமியின் கருத்தும் அதுவேயாகும்.

மொழிபெயர்ப்பினை மொழி ஆக்கம் என்று குறிப்பதே சிறந்தது என்று சிலர் கூறுவதாக மா. சண்முக சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். இவை இரண்டும் வேறுபட்டன என்று தெளிவுறுத்துகிறார். மொழிபெயர்ப்புப் பணியைக் கைக்கொள்ளுகின்ற விதத்தைப் பொறுத்து அதனை வகைப்படுத்த லாம். எந்த முறையில் மொழிபெயர்ப்புச் செய்கின்றோமோ அதனடிப்படையில் வகைப்படுத்தலாம். 1. சொல்லுக்குச் சொல் பெயர்த்தல் (Metaphrase Translation and Literal Translation), 2. விரிவான மொழிபெயர்ப்பு (Amplification), 3. முழுமையான அல்லது சரியான மொழிபெயர்ப்பு (Close or Accurate Translation), 4. சுருக்கம் (Paratrase or abridgement), 5. தழுவல் (Adaptation), 6. மொழியாக்கம் (Transcreation) என்று அமைக்கலாம். மொழிபெயர்ப்புப் பணியை மேலும் வகைப் படுத்தலாம். 1. பைபிள் மொழிபெயர்ப்பு, 2. குழந்தைகளுக்கான மொழிபெயர்ப்பு, 3. திரைப்பட வசனங்கள் மொழிபெயர்ப்பு, 4. கருவி மொழிபெயர்ப்பு என்பனவாகும்.

### சொல்லுக்குச் சொல் பெயர்த்தல்

மூலமொழியிலுள்ள சொல்லுக்கு இணையான மாற்று மொழிச் சொல்லால் பெயர்க்கும் முறையைத்தான் சொல்லுக்குச் சொல் பெயர்த்தல் என்கிறோம். இத்தகு மொழிபெயர்ப்புகள் எல்லா சமயங்களிலும் சரியாக வாராத காரணத்தினால் இதனை உண்மையான மொழிபெயர்ப்பாக யாரும் கருதுவதில்லை. ஆனால் மொழிபெயர்ப்பைப் பொறுத்த அளவில் இதுவும் ஒரு வகையாக அமைகின்றது.

### விரிவான மொழிபெயர்ப்பு

மூலமொழி நூலின் செய்திகளை விட அதிகமான செய்திகளை இப்பெயர்ப்பு நூலிற்கு ஏற்றவாறு கூறுகின்றதைத்தான் விரிவான மொழிபெயர்ப்பு என்கின்றனர்.

மூலநூலின் கருத்தோடு முக்கியமாகத் தேவைப்படுகின்ற கருத்துகளையும் எடுத்துக் கூறுகின்ற நிலையைத்தான் காண முடிகின்றது. இதற்கு 'அபிநயங்களை மட்டுமே கூறும் இந்நூலுக்கு முற்சேர்ப்பாகவும் பிற்சேர்ப்பாகவும் பல இன்றியமையாச் செய்திகள் 'மகாபரத சூடாமணி' எனும் நூலிலிருந்து தேர்ந்தெடுத்துக் கூறப்பட்டுள்ளன. (மொழிபெயர்ப்பியல், சு. சண்முக வேலாயுதம், ப. 17).

### முழுமையான அல்லது சரியான மொழிபெயர்ப்பு

ஒரு மொழியில் அமைந்துள்ள கருத்தினை முழுமையாக இன்னொரு மொழியினருக்கு மாற்றி அமைக்கின்ற பணியினையே முழுமையான் மொழிபெயர்ப்பு என்பர். சான்றாக ஜேம்ஸ் ஆலன் என்னும் ஆங்கில அறிஞரின் 'As a man thinketh' என்ற நூலில்,

"Thought in the mind Lath made us. what we are
By thought was wrought and built. If a man's mind
Hath evil thoughts, pain comes on him as comes..."

என்ற பாடல் அடிகள் இடம்பெறுகின்றன. மேற்கூறிய நூலைத் தமிழில் வ.உ.சி. "மனம் போல் வாழ்வு" என்று பெயரிட்டார். அந்நூலில்,

***"மனமெனும் நினைப்பே நமையாக்கியது***
***நினைப்பால் நாம்நம் நிலையை உற்றனம்...."*** (மேற்படி ப. 19)

இவ்வாறு பெயர்க்கப்பட்டுள்ளது.

### சுருக்கம்

மூலநூலிலுள்ள செய்திகளை முழுமையாக மொழிபெயர்க்காமல் அதனைச் சுருக்கமாகத் தருகின்ற நிலைக்குத்தான் சுருக்கம் என்று பெயர். இவ்வகையானது கவிதை வடிவிலோ, உரைநடை வடிவிலோ மட்டும் அமையாது புதினம், நாடகம், வாழ்க்கை வரலாறுகள், அறிவியல் நூல்கள் போன்றவற்றிலும் காணப்படுகின்றன. இவற்றினால் மூலத்தின் முழுமையான இன்பத்தினைப் பெற முடியாது. இத்தகு சுருக்கங்களைப் படிக்கும்பொழுது மூலத்தைப் படிக்க வேண்டும் என்ற எண்ணம் வர வேண்டும். அப்பொழுதுதான் அவை சிறப்புறும். மூலத்தின் சிறந்த பகுதிகள் அனைத்தினையும் விடுபடாதவாறு பார்த்துக் கொள்ளுதல் மொழிபெயர்ப்பாளரின் கடமையாகிறது.

### *தழுவல்*

ஆரம்பகாலத்தில் மொழிபெயர்ப்பைப் பொறுத்தவரையில் தழுவல்கள்தான் ஆதிக்கம் செலுத்தியிருந்தது என்பதற்குக் கம்பராமாயணத்தைச் சான்றாகச் சுட்டலாம். இவ்வகையில் மூல நூலாசிரியனைவிட மொழிபெயர்ப்பாளரின் புலமையே மிகுதியாகக் காணப்படுகிறது. அதோடு மூலத்தைத் தேவைக்கேற்ப விருப்பிற்கேற்ப மாற்றக் கூடிய வாய்ப்புகள் உள்ளமையாலும் நூலாசிரியரை விட மொழிபெயர்ப்பாளரே முன் நிற்கிறார். மூலநூலின் கருத்தினை மட்டும் அதனின்றும் பெற்றுக் கொண்டு ஏனைய நிகழ்வுகள், பாத்திரங்கள், நிகழ்ச்சி, மாற்றங்கள் போன்றன வற்றைத் தம் எண்ணப்படி மாற்றிக் கொள்ளுதல் இதனுள் அடங்குகின்றன.

### *மொழியாக்கம்*

இன்னொரு மொழியிலிருந்து மொழிபெயர்த்திருந்தாலும் கூட, நாம் மொழிபெயர்த்துள்ள மொழியின் மரபு அதில் காணப்படவேண்டும். அவ்வாறு மொழிபெயர்ப்பதை மொழியாக்கம் என்பர். சான்றாக உமர்கய்யாம் பாடல்,

Here with a loaf of bread, beneath the bough
A flask of wine, a book of verse and thou
Beside me singing in the wilderness
And wilderness in Paradise.

இதனை கவிமணி,

***வெயிற்கேற்ற நிழலுண்டு, வீசுந்தென்றல் காற்றுண்டு***
***கையில் கம்பன் கவியுண்டு கலசம் நிறைய மதுவுண்டு***
***தெய்வீகம் பலவுண்டு, தெளிந்துபாட நீயுண்டு***
***வையம் தருமிவ் வளமின்றி வாழும் சொர்க்கம்***
***வேறுண்டோ*** (மொழிபெயர்ப்பியல், ப. 21)

எனப் பெயர்த்துள்ளார்.

ஒரு மொழிபெயர்ப்பாளர், மொழிபெயர்க்க தேர்ந்தெடுத்துக் கொண்ட மூலநூலைப் படித்து அதன் உள்ளீட்டை எந்த வழிமுறையில் பெயர்த்தளிப்பது என்று தீர்மானித்துக் கொள்வது மொழிபெயர்ப்பு முறைகளாக அமைந்து வருதலைக் காணலாம். ஒரு மூலநூலை நேர்மொழியெர்ப்பாகவோ, கருத்துப்பெயர்ப் பாகவோ, தழுவலாகவோ, பெயர்ப்பு மொழியில் கொண்டு வரலாம். வெவ்வேறு மொழிகளிலிருந்து தமிழில் இடம்பெற்ற சில புதினங்களின் பெயர்களைக் கொண்டும் வேறு சான்றுகளுடனும் சுருக்கமாக இங்கு விளக்கப்படுகிறது.

### நேர்மொழிபெயர்ப்பு

மூலமொழியில் உள்ளதைச் சிறிதும் மாறுபடாமல் அவ்வாறே பெயர்ப்பு மொழியில் வழங்குவது நேர் மொழிபெயர்ப்பாகும். சான்றாக,

1. 'சதுவு' என்ற தெலுங்கு மொழிநூல் பெயர் அவ்வாறே 'படிப்பு' எனத் தமிழில் வழங்கப்பட்டுள்ளது.

2. 'டாட்டு' என்ற கன்னட மொழி நூற்பெயர் 'தாண்டு' எனத் தமிழில் வழங்கப்பட்டுள்ளது.

பொதுவாக கவிதைகள் நேர்மொழிபெயர்ப்பில் அமைவது கடினம். தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய தமிழுடன் நெருங்கிய தொடர்புடைய மொழி அமைப்புகள் நேர்மொழிபெயர்ப்பின் சிறப்பாக அமைவதை காணலாம். ஆங்கிலம், பிரஞ்சு, ருஷ்ய மொழிக்கவிதைகளை இவ்வாறு மொழிபெயர்த்து கூறுவது கடினம். ஆகையால் இவை கருத்துப் பெயர்ப்பாக தமிழில் வழங்கும் நிலை ஏற்படுகிறது. மொழிபெயர்ப்பானது உள்ளதை உள்ளவாறே பெயர்த்துக் கூற வேண்டும் என்றாலும் அவை கருத்துப்பெயர்ப்பாக அமைவது சிறந்ததென சாமிநாத சர்மா, கா.ஸ்ரீ.ஸ்ரீ., அப்பாதுரை போன்ற மொழிபெயர்ப்பு அறிஞர்களால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

### கருத்துப்பெயர்ப்பு

மூலமொழியில் உள்ளதைச் சொல்லுக்குச் சொல் என்று நேருக்கு நேராக பெயர்ப்பு மொழியில் எழுதாமல், அதன் கருத்தைப் பெயர்த்தெழுவது கருத்து மொழிபெயர்ப்பு முறையாகும்.

### ரிச்சர்ட் பிரிஸ்லின்

மொழியியல் அறிஞரான இவர் மொழிபெயர்ப்பு முறைகளை 4 என வகைப்படுத்துவர்.

1. நடைமுறைப் பயன்நாட்டமுறை (Pragmatic Method)
2. கவிதைப்பெயர்ப்பு முறை (Aesthetic Method)
3. பண்பாட்டுப் பெயர்ப்பு முறை (Ethnographic Method)
4. மொழியியல் பெயர்ப்பு முறை (Linguistic Method)

### நடைமுறைப் பயன்நாட்டமுறை

மூலமொழியில் அடங்கிய செய்தியைத் தெளிவாக உறுதியாக வெளியிடுவதே இம்மொழிபெயர்ப்பின் நோக்கம். இயற்பியல், வேதியியல், தொழில்நுட்பவியல் முதலியவற்றில் இத்தகைய மொழிபெயர்ப்பு முறை

மேற்கொள்ளப்படுகிறது. அறிவியல் செயல்முறைகளில் கருத்துடையது. அறிவியல் மொழிபெயர்ப்பு முறையை நடைமுறைப் பயன்நாட்டவகை எனக் குறிப்பிட்டுள்ளார் ரிச்சர்ட் பிரிஸ்லின்.

### கவிதைப் பெயர்ப்பு முறை

மூலமொழிக் கவிதை இயல்பை பெயர்ப்பு மொழி இயல்புக் கேற்ற பெயர்க்கப்படுவதில் இம்முறை பின்பற்றப்படுகிறது. கவினும், கவிதை நயமும், கலை நயமும் வாய்ந்த மொழிபெயர்ப்புகளுக்கு இம்முறைப் பயன்படுகிறது.

### பண்பாட்டுப் பெயர்ப்பு முறை

ஒரு மொழியின் பண்பாட்டு பின்புலத்தில் அமைந்துள்ள சிறப்புச் சொற்களை, மரபுத் தொடர்களை, மொழிபெயர்ப்பதைப் பண்பாட்டு மொழிபெயர்ப்பு எனக் குறிக்கப்படுகிறது.

### மொழியியல் பெயர்ப்பு முறை

1. நேர்மொழிபெயர்ப்பு (Literal Translation)
2. வரையறைப்படுத்தப்பெற்ற மொழிபெயர்ப்பு (Restricted Translation)
3. மொழிபெயர்ப்பில் இணைகள் அல்லது சமன்கள் (Equivalent Translation)
4. ஒலி வடிவ மொழிபெயர்ப்பு (Transliteration)
5. கருத்து மொழிபெயர்ப்பு (Total Translation)

இவர்தம் மொழிபெயர்ப்பு முறைகள், பிற அறிஞர்கள் கூறும் முறைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாக அமைந்துள்ளன.

### பீட்டர் நியூமார்க் (Peter Newmark)

இவரும் மொழியியல் அடிப்படையில் மொழிபெயர்ப்பு முறைகளைக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். 'எ டெக்ஸ்ட் புக் ஆப் டிரான்ஸ்லேஷன்' (A Text Book of Translation) என்ற தனது நூலில் மொழிபெயர்ப்பு முறைகளைப் பற்றிக் கூறும்போது,

| *மூலமொழி அணுகுமுறை (SL Emphasis)* | *பெயர்ப்புமொழி அணுகுமுறை (TL Emphasis)* |
|---|---|
| சொல்லுக்குசொல் பெயர்ப்பு (Word for word translation) | தழுவல் (Adaptation) |
| நேர்மொழிபெயர்ப்பு (Literal translation) | கருத்துப்பெயர்ப்பு (Free translation) |
| உண்மை மொழிபெயர்ப்பு (Faithful translation) | மரபு மொழிபெயர்ப்பு (Idiomatic translation) |
| பொருண்மை மொழிபெயர்ப்பு (Semantic translation) | தகவல் மொழிபெயர்ப்பு (Communicative translation) |

எனக் குறிப்பிட்டுள்ளார் (தமிழ் மொழிபெயர்ப்பில் வரலாற்று நூல்கள், மு. வளர்மதி, ப. 38). மேற்குறிப்பிட்டுள்ள இம்மொழிபெயர்ப்பு முறைகளின் பொருண்மை மொழிபெயர்ப்பு மிகத் துல்லியமாக அமைகிறது. பொருண்மை மொழிபெயர்ப்பில் மூல நூலாசிரியரின் கருத்துக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. தகவல் மொழிபெயர்ப்பில் அந் நூலைப் படிப்போருக்கு முக்கியத்துவம் அளிப்படுகிறது.

*ரோமன் ஜேக்கப்ஸன் (Roman Jackobson)*

ரோமன் ஜேக்கப்ஸன் என்பவரும் மொழிபெயர்ப்பு முறைகளை ஆராய்ந்துள்ளார். 'மொழியியல் நோக்கில் மொழிபெயர்ப்பியல்' என்ற கட்டுரையில்,

1. ஒரு மொழிக்குள்ளே செய்யப்படும் மொழிபெயர்ப்பு (Intra-Lingual Translation)
2. இரு மொழிகளுக்கிடையே செய்யப்படும் மொழிபெயர்ப்பு (Inter-Lingual Translation)

எனும் இரு வகை மொழிபெயர்ப்பு முறைகளைக் குறிப்பிட்டுள்ளார் (மொழிபெயர்ப்பியல், சி. சிவசண்முகம், வே. தயாளன், ப. 29).

*ஒரு மொழிக்குள்ளே செய்யப்படும் மொழிபெயர்ப்பு*

ஒரு வாக்கியத்தில் சொற்களை இடம் மாற்றி அமைப்பது அல்லது ஒரு சொல்லுக்கு மறுசொல் அமைப்பது ஆகியன இவற்றுள் அடங்குவனவாகும்.

(எ-டு) மத்திய அமைச்சர் நாளை வருகிறார்.

இவ்வாக்கியத்தை,

நாளை மத்திய அமைச்சர் வருகிறார்

என மாற்றி அமைத்துக் கொள்வது இம்முறையாகும்.

### இரு மொழிகளுக்கிடையே செய்யப்படும் மொழிபெயர்ப்பு

ஒரு மொழியிலுள்ள கருத்தினைப் பிறிதொரு மொழிக்கு மாற்றி அமைக்கும் முறைக்கு இப்பெயராகும். மொழிபெயர்ப்பு என்ற கூற்றிற்கு உண்மையானப் பொருளைக் கொடுப்பது இவ்வகை மொழிபெயர்ப்பே. பிறமொழியிலிருந்து தமிழ், தமிழிலிருந்து பிறமொழி என்ற இவ்விரு வழிமுறைகள் மூலம் இவ்வாய்வுகள் நடைபெற்று வருகின்றன. சான்று.

*அன்னை*( (பிறமொழி - தமிழ்)

*என்*
*குடத்தில்*
*நிறைய*
*நதிக்கு*
*ஒரு புன்னகையே*
*போதும்*
(இன்றைய மலையாளக் கவிதைகள், பி. ராமன், ப. 36)

*(தமிழ் - பிறமொழி)*

*நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்*
*பண்புடை யாளர் தொடர்பு* (குறள். 784)

Not to laugh is friendship made
But to hit when faults exceed (Kural. 784)

*ஆன்ட்ரோலெவிவெரே*

மொழியியல் அறிஞரான ஆன்ட்ரோலெபிவெரே மொழி பெயர்ப்பு முறைகளை, வகைப்படுத்தும்போது நான்கு முறைகளைச் சுட்டுகிறார்.

1. ஒலிபெயர்ப்பு (Transliteration)

ஒரு மொழியிலுள்ள ஒலிக்குறிப்புச் சொற்களைப் பெயர்ப்பு மொழியில் எழுதுவது.

2. சந்த மொழிபெயர்ப்பு (Meterical Translation)

கவிதையிலுள்ள அடி, சீர், தளை போன்றவற்றிற்கிணை யானவற்றைப் பெயர்ப்பு மொழியில் மாறாமல் அவ்வாறே மாற்றியமைத்து எழுதுவது.

3. கவிதையை உரைநடையாக மொழிபெயர்த்தல் (Poetry into Prose)

கவிதையை உரைநடை வடிவில் மொழிபெயர்ப்பது.

4. கவிதையில் அமையும் எதுகை மோனை மொழிபெயர்ப்பு
(Rhymed Translation)

மூலமொழிக் கவிதையில் எதுகை, மோனை அமைப்பிற்கு ஏற்ற வகையில் பெயர்ப்பு மொழியில் அமையுமாறு எழுதுதல் என்று விளக்கியுள்ளார்.

### *தியோடர் சேவரி* (Theoder Savary)

தியோடர் சேவரி 'தி ஆர்ட் ஆப் டிரான்ஸ்லேஷன்' (The Art of Translation) என்னும் நூலில் மொழிபெயர்ப்புக்குரிய அடிப்படைச் செய்திகளைப் பற்றி விளக்கும்போது நான்கு மொழிபெயர்ப்பு முறைமைகளைக் குறிப்பிட்டுள்ளார். அவை,

1. செய்தி மொழிபெயர்ப்பு
2. பொது மக்களார்வ மொழிபெயர்ப்பு
3. இலக்கிய மொழிபெயர்ப்பு
4. அறிவியல் தொழில்நுட்ப மொழிபெயர்ப்பு

### *செய்தி மொழிபெயர்ப்பு*

விமான நிலையம் போன்ற பொதுவிடங்களில் பயணிகளுக்கானப் பல்வேறு மொழிகளில் எழுதப்பட்ட துண்டு அறிக்கைகள் அல்லது ஒரு மருந்து அல்லது இயந்திரத்தை எப்படி உபயோகிப்பது என்பது பற்றிய விளம்பரம் போன்ற செய்திகளை மொழிபெயர்ப்பது இவ்வகையாகும்.

### *பொது மக்களார்வ மொழிபெயர்ப்பு*

பொது வாசகருக்காக ஆக்கப்பட்ட ஜனரஞ்சகமான மொழிபெயர்ப்புகள் என தியோடர் சேவரியரின் விளக்கத்தை வை. சச்சிதானந்தம் சுருக்கமாகத் தமது நூலில் எடுத்தாண்டுள்ளார். (ஒப்பிலக்கியம் - ஓர் அறிமுகம், வை. சச்சிதானந்தன், ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டி பிரஸ், சென்னை, பதி. 1985, ப. 167).

### *இலக்கிய மொழிபெயர்ப்பு*

கவிதையைக் கவிதையாக மொழிபெயர்த்தல், கவிதையை உரைநடையாக மொழிபெயர்த்தல், உரைநடையை உரைநடையாக மொழிபெயர்த்தல் ஆகிய அனைத்தையும் தன்னுள் அடக்குவதாக இம்மொழிபெயர்ப்பு முறை விளங்குகிறது.

### *அறிவியல் தொழில்நுட்ப மொழிபெயர்ப்பு*

அறிவியல் தொழில்நுட்பத் துறையில் வெளிவந்த நூல்களும் உலகெங்கும் வணிக நோக்கில் செயல்பட்டு வரும் அனைத்து மொழிபெயர்ப்புகளும் இப்பிரிவில் அடங்கும்.

இவ்வாறு அறிஞர்கள் மொழிபெயர்ப்பு முறைகளைத் தங்கள் அணுகுமுறைகளுக்கேற்ப, அனுபவங்களுக்கேற்ப வகைப்படுத்தி விளக்கமளித்துள்ளார். தமிழில் அண்மைக் காலத்தில் இத்தகைய மொழிபெயர்ப்பு முறைகளைக் குறித்து சிந்தித்து சில முடிவுகளை தந்துள்ளனர். மணவை முஸ்தபா சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தல், வரையறையற்ற மொழிபெயர்ப்பு, பொது மக்களார்வ மொழிபெயர்ப்பு, துல்லியமான மொழிபெயர்ப்பு, மொழியாக்கம், விரிவான மொழிபெயர்ப்பு, சுருக்க மொழிபெயர்ப்பு, தழுவல், திரைப்பட மொழிமாற்றப் பெயர்ப்பு, திரைப்பட சாராப் பெயர்ப்பு, கருவி மொழிபெயர்ப்பு, சிறுவர்க்கான மொழிபெயர்ப்பு (காலம் தேடும் தமிழ், மணவை முஸ்தபா, மீரா பதிப்பகம், சென்னை, பக். 115-116) என மொழிபெயர்ப்பினை வகைப்படுத்திச் சான்றுகளைச் சுட்டியுள்ளார்.

இவைத்தவிர பத்திரை மொழிபெயர்ப்பு, சமய மொழி பெயர்ப்பு, மருத்துவம், சோதிடம், இலக்கிய மொழிபெயர்ப்புகள் எனவும் வகைப்படுத்தலாம்.

### *மொழிபெயர்ப்பின் பயன்*

மொழிபெயர்ப்பினால் கிடைக்கின்ற பலன்கள் பலவாகும். ஒரு சமுதாயம் மொழிகளைப் பயன்படுத்துவதன் மூலம் பல வழிகளிலும் பயனடைகிறது. அதுபோலவே மொழிபெயர்ப்பைப் பயன்படுத்திக் கொள்வதன் மூலமும் மொழியும் அது சார்ந்துள்ள சமுதாயமும் பயனடைகின்றது. மொழிபெயர்ப்பால் ஒரு மொழியிலுள்ள செய்திகள் பிறிதொரு மொழிக்குச் செல்கின்றன. அவ்வாறு செய்வதால் சமுதாயப் பயன்பாடும் மற்றும் மொழிப் பயன்பாடும் அதிகமாகிறது. அறிவு வளர்ச்சிக்கும், தேசிய ஒருமைப்பாட்டிற்கும் மொழிபெயர்ப்புகள் துணைபுரிகின்றன.

> ***"மொழியியலின் ஒரு பகுதியாக இன்று மொழிபெயர்ப்பியலை உலகெங்கும் ஆராய்ந்து வருகின்றனர். ஆகவே மொழிபெயர்ப்பியல் என்பது பயனாக்க மொழியியலின் (applied Linguistics) ஒரு பிரிவாக இன்று அமைந்துள்ளது"***
>
> (மொழி பெயர்ப்பியல், சிவசண்முகம், ப. 28)

இன்றைய அறிவியல் நாளைய தொழில் துறைகளுக்குப் பயன்படுவதுபோல இன்றைய மொழிபெயர்ப்பு நாளைய சமுதாயத்தைப் பயனுள்ளதாக்கவும் வளர்ச்சி மிக்கதாக்கவும் பெரிதும் பயன்படும்.

- மொழி வளம் பெறுகிறது.
- ஒப்பிலக்கிய ஆய்வு இலக்கிய மொழிபெயர்ப்புகளால் சிறப்புப் பெறுகிறது

- ஒரு மொழியினர் அல்லது நாட்டினர் இனத்தவரின் நாகரிகம், பண்பாட்டுக் கூறுகளை அறிதற்கும் மூலமொழியின் சிறப்புகளை உணர்தற்கும் பயன்படுகிறது.
- பிற சமயம் பற்றிய அறிவிற்கு மொழிபெயர்ப்புகள் உதவுகின்றன.
- உலகப் புகழ்பெற்ற அறிஞர்களையும் அவர்தம் சாதனைகளையும் அறிதற்குப் பயன்படுகின்றது.
- மூலநூலாசிரியர் பற்றியும், அவர்தம் சிறந்த படைப்புகளையும் புரிந்துகொள்ள வாய்ப்பாக உள்ளது.
- ஒரு நாட்டின் வரலாறு, பொருளாதாரம், புவியியல் பற்றி அறியவும் பயன்படுகின்றன.
- பிறமொழிகளிலிருந்து எழுதப்பட்ட அறிவியல் மருத்துவத் தொடர்பானச் செய்திகளை அறியும் வாய்ப்பாக உள்ளது.
- எத்துறையைச் சார்ந்தவராயினும் உலகப் புகழ் பெற்றவரையும் அவரது சாதனைகளையும் உணர்வதற்கு மொழிபெயர்ப்புகள் சிறந்த கருவியாகும்.

அன்றாட அறிவரங்கில் மொழிபெயர்ப்புப்பணி பொருள் பொதிந்த பயன் கெழுமிய செயலாகவே மலர்ந்து வருகிறது என செருமானிய புலவர் க.தே. கூறுகிறார்.

### *மொழிபெயர்ப்புச் சிக்கல்கள்*

மொழிபெயர்ப்பு என்றதுமே நம்முன் நிற்பது அதனால் ஏற்படும் சிக்கல்களுமாகும். எவ்வளவு சிக்கலானப் பணியாக இருந்தாலும், இன்றளவும் அப்பணியினைப் பெரும்பாலோர் செய்ய முயலுதல் வெளிப்படை. மொழிபெயர்ப்புப் பணியின் சிக்கல்களைப் பல்வேறு வகைகளாகப் பிரிப்பர். இவை எல்லா மொழிகளிலும் ஏற்படுகின்ற சிக்கல்களாகும்.

### *சொல்லும் பொருளும்*

ஒரு சொல் பல பொருளைத் தருகிறது. சான்று 'கூடி' என்ற சொல்லைச் சுட்டலாம். இந்நிலை மொழிபெயர்ப்புப் பணியிலே, மொழிபெயர்ப்பாளருக்கு இடர்ப்பாடாக இருக்கின்றது. ஆத்திசூடியில் 'கிழமைப்படவாழ்' என்ற நெறி அமைகிறது. இதில் கிழமை என்பதற்கு நாள், உரிமை, நட்பு எனும் பொருட்கள் உள்ளன. இவ்விடத்தில் ஆத்திசூடி நட்பினையே மையமிடுகிறது. ஆங்கிலத்தில் பெயர்க்கும்போது 'Live in Friendship' (நட்போடு வாழ்) என்றே பெயர்க்க வேண்டியுள்ளது.

### *பழமொழிகள்*

மக்களின் அன்றாடப் பழக்க வழக்கங்களிலே, அதாவது பேச்சு வழக்கிலே 'பழமொழிகள்' பெரும்பாலும் விரவிக் கிடக்கின்றன. தமிழில்

"கிடைக்கப் போகும் பலாக்காயினும் கையில் கையில் இருக்கும் களாக்காய் மேல்" என்பதை ஆங்கிலத்தில், 'A bird in the Land is worth two in the bush' என்றே பெயர்க்கின்றனர்.

### *மரபுச் சொற்கள்*

மரபுச் சொற்களும் மொழிபெயர்ப்பாளரைப் பொறுத்த வரையில் தடைக்கற்களாக விளங்குகின்றன. தமிழிலே 'பிடி' என்று பெண் யானையையும், 'களிறு' என்ற ஆண் யானையையும் குறிப்பர். இதனை ஆங்கிலத்தில் 'Female Elephant, Male Elephant' என்று சுட்டவேண்டியுள்ளது.

### *வழக்குச் சொற்கள்*

வழக்குச் சொற்களையும் மொழிபெயர்ப்பாளர்களினால் மொழிமாற்றம் செய்ய முடிவதில்லை. மூலமொழியிலுள்ள சொற்களுக்கு இணையான கலைச்சொல்லை மாற்று மொழியில் பெறுவதென்பது இயலாத காரியம். இது போன்ற சிக்கல் ஏற்படும்போது வழக்குச்சொற்கள் நிறைந்த வாக்கியங்கள், பத்திகளை விட்டுவிட்டு ஒரு சாதாரண நடையினைப் பயன்படுத்தலாம்.

### *பொருள்கோள்*

கவிதையில் சொற்றொடர்கள் சில வேளைகளில் பொருளில் தெளிவின்மையைத் தோற்றுவிக்கும். வாக்கிய அமைப்பை மூலத்திலிருப்பது போன்றே வைத்துக் கொள்வதா அல்லது தெளிவிற்காக வரிசையினை மாற்றி அமைப்பது நலமா என்பது பற்றிய ஆய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன.

### *விடுகதைகள்*

விடுகதைகள் என்பது வார்த்தையும், அதோடு சேர்ந்து பொருளும் வருமாறு அமையும். இந்நிலை அமையாவிட்டால் விடுகதைக்கு விடையளிப்பது கடினம். ஆனால் வார்த்தையும், பொருளும் ஒரு சேர அமைகின்ற நிலையிலே அதனைப் பெயர்க்க முடியாது.

'மாதங்களின் மறுபெயர்
இரவில் வருவது - அது என்ன

என்பதற்கு விடை 'திங்கள்' என்பதாகும். திங்கள் என்ற சொல் மாதத்தினையும் நிலவினையும் ஒரு சேரக் குறிக்கும். இதனை நாம் ஆங்கிலத்தில் அமைக்க முடியவில்லை. இதனை ஒரு வகையில் குறை என்று சொல்லலாம்.

### *சிலேடை*

சிலேடை என்பதற்கு ஆங்கிலத்தில் 'pun' என்ற சொல்லால் குறிப்பர். இருபொருள் தருகின்ற சொற்களே அவை என்பது தெரிந்ததே. அழகிய சொக்கநாத பிள்ளை சிவனையும் தேங்காயையும் இணைத்து

சிலேடையாக மூன்று கண்களை உடையவனும் வழிபடப்படுபவனும் வழிபடுவதற்குப் பயன்படுகிறதையும் இன்னும் பல நிலைகளிலும் பாடி இருக்கின்றனர். மொழிபெயர்ப்பில் இந்நடையைத் தரல் என்பது கடினமான ஒன்றாகும்.

### தொடைநயம்

எதுகை, மோனை கவிதைகளிலும், மற்றும் சில இலக்கிய வகைகளிலும் காணப்படுகின்றன. மொழிபெயர்க்கும் போது எதுகை, மோனை நயத்தினைக் கொண்டு வர முடியாது.

### உறவுமுறைச் சொற்கள்

தமிழில் உறவுமுறைச் சொற்கள் அதிக அளவிலே வழங்கி வருதலைக் காண்கிறோம். இம்மாதிரியான உறவுமுறைச் சொற்களை மொழிபெயர்க்கும்போது அதற்கு இணையான சொல்லையே பயன்படுத்த வேண்டிய நிலையில் இருக்கிறோம். தமிழில் அத்தை என்ற சொல் ஆங்கிலத்தில் 'ஆன்ட்' என்று பெயர்க்கப்படுகிறது. ஆங்கிலத்தில் 'ஆன்ட்' என்ற உறவுமுறைச் சொல்லின் உண்மையானப் பொருளை வெளிப்படுத்தவில்லை. தமிழில் தனித்தனியாகக் குறிக்கின்ற சித்தி, அத்தை, மாமி, பெரியம்மா என்ற சொற்களுக்கும் 'ஆன்ட்' என்றே பயன்படுத்த வேண்டியுள்ளது.

### பெயர்ச்சொல்

'அவன்', 'அவர்' என்ற இருசொற்களை ஆங்கிலத்தில் 'He' என்ற ஒரே சொல்லால் குறிக்கிறோம். ஆனால் தமிழில் மேற்கூறிய இரு சொற்களும், மரியாதையின் அடிப்படையில் பிரிக்கப் பட்டுள்ளது. இதனை நாம் மொழிபெயர்ப்பில் முற்றிலுமாக இழந்து விடுகின்றோம்.

### இரட்டைக்கிளவி

இரட்டைக்கிளவி என்ற சொற்றொடரானது தமிழுக்கே யுரியது. குடுகுடுகிழவன் என்ற தொடரில் குடுகுடு என்பது பெயரடையாக அமைகின்றது. இப்பெயரடையானது. மிகவும் வயதானவன் என்ற பொருளைத் தருகிறது. மொழிபெயர்ப்பில் நாம் அதன் பொருளைக் கொடுக்கலாமே ஒழிய, அந்தக் குறிப்பிட்ட சொற்றொடரானது விலகி விடுகின்றது.

### சித்திரக்கவி

சித்திரக்கவி என்பது பலவகையான கவிதைகளாகும். அதில் எழுத்துக்கள் ரதமாகவோ, வண்டிச் சக்கரமாகவோ, இரு நாகமாகவோ, குத்துவிளக்காகவோ, அன்னமாகவோ அமைகின்றன. இதில் எழுத்துக்கள் குறிப்பிடத் தகுந்த இடத்தைப் பெற்றுள்ளன. இதை நாம் மற்றொரு மொழிக்கு மாற்றி அமைக்கின்றபோது, எழுத்துக்களை மூலத்தில் அமைவது போன்றே அமைப்பது கடினம், மேலும் இயலாததுமாகும்.

மொழிபெயர்ப்புப் பணியிலே ஈடுபடுகின்ற போது, எதிர் கொள்கின்ற சிக்கல்களிலே பலவற்றிற்கு நாம் ஏதாவது மாற்றம் காணமுடியும். சிலவற்றை மொழிபெயர்க்க முடியாத தன்மைக் கொண்டது என்ற வகையில் அடக்கலாம். ஆனால் இவ்விரண்டையும் சீர்தூக்குகின்ற நிலையிலே, மொழிபெயர்ப்புச் சிக்கல்கள் வெற்றி கொள்ளக் கூடியவைகளே என்பதாகத்தான் அமைகிறது. இவ்வாறு மொழிபெயர்ப்புப் பணியிலே சிக்கல்கள் அதிகமாக இருந்தும், அவற்றை நிறைவு செய்துவிட முடியும் என்ற நம்பிக்கையில் மொழிபெயர்ப்புப் பணியானது மிகவும் சீரிய முறையில் பன்னெடுங்காலமாகவே நடைபெற்று வந்திருக்கின்றது. இன்றளவும் அந்நிலைத் தொடர்கிறது.

# தமிழில் மொழிபெயர்ப்பு

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற கணியன் பூங்குன்றனாரின் பாடலுக்கு ஏற்ப இன்று தமிழன் மொழி பெயர்ப்புத் துறையில் கண்ட முன்னேற்றம் குறிப்பிடத்தக்கது. தமிழிலிருந்து பிறமொழிக்கும் பிற மொழியிலிருந்து தமிழுக்கும் எண்ணிலடங்காத நூல்கள் இன்றளவும் மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. மொழிபெயர்ப்பு நூல்களின் வரவினையும், வளர்ச்சியினையும் இப்பகுதி சுட்டுகிறது.

வணிகம், சமயத்தாக்கம், பிற அரசுத் தொடர்பு காரணமாக, ஒரு மொழியினர் வாழ்ந்த பகுதிகளில் பிற மொழியினர் குடியிருப்புகள் ஏற்பட்டு இருமொழியினர் நெருங்கி வாழும் நிலை தோன்றிய போது, கருத்துப் பரிமாற்ற அடிப்படையில், மொழிபெயர்ப்பும் தோன்றி வேரூன்றுகிறது. இருமொழிச் சமுதாயங்கள் தொடர்புறும் ஆதிகாலத்திலேயே மொழிபெயர்ப்பு தோன்றியிருப்பினும் அது ஒரு கலையாகி வளர்ச்சியுறுவதற்கு நீண்டகால இடைவெளி தேவைப்படுகிறது.

தமிழில் தலைநூலான தொல்காப்பியம்,

*தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து*
*அதர்ப்பட யாத்தலொடு அனை மரபினவே (1597)*

எனும் நூற்பாவில் மொழிபெயர்ப்பு எனாது. 'மொழிபெயர்த்து அதர்ப்படயாத்தல்' எனக் கூறுவதால் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்க்கும் நிலை கருதப்படாது கருத்தைத் தழுவி அளிக்கும் நிலையே கருதப்படுகின்றது.

தமிழைப் பொறுத்தவரையில் முற்காலத்தில் மொழி பெயர்ப்புகளை விடத் தழுவல்களே மிகுதி. சங்க இலக்கியம் மற்றும் அதனைத் தொடர்ந்த பதினென் கீழ்க்கணக்கு நூல்களிலும் வடமொழிக் கலப்பினைக் காணலாம். மொழிபெயர்ப்பின் ஆதிக்கத்தை நம்மால் இன்றளவும் தெளிய இயலவில்லை. காப்பிய கால ஆரம்பத்தின் இரு நூல்களான சிலம்பும், மேகலையும் பிற மொழிகளிலிருந்து பெயர்க்கப்படாமல் தமிழ்க் காப்பியமாகவே அமையினும், பெருங்கதை தொடங்கிய பல காவியங்கள் தழுவலாகத் தமிழ்க்காப்பிய உலகில் வந்து புகுந்தன. பெரியபுராணம், திருவிளையாடல் புராணம் போன்ற சில காப்பியங்கள் தவிரப் பிற அனைத்தின் கருவும் பிறமொழி மூலத்தை உடையன. பதினெட்டாம் நூற்றாண்டுக்குப் பின் மக்களின் இலக்கிய

நயம் சுவைக்கும் எண்ணம் காரணமாகவும், நாடு மற்றும் மொழியின் முன்னேற்றம் காரணமாகவும் மொழிபெயர்ப்பு ஓங்கி வளர்ந்தது.

படைப்பிலக்கியங்களான சிறுகதை, புதினம், கட்டுரை, உரைநடை, நாடகம் எனும் துறைகள் ஏற்படவும், மறுமலர்ச்சி அடையவும் பிறமொழியிலிருந்து வந்து புகுந்த பல நூல்கள் துணையாயின என்பதை மறுக்க இயலாது. "தமிழ்நாட்டில் நாவல் வளர்வதற்குள் மற்ற நாடுகளில் பலவகைக் கதைகள் பெருகி வெளியாகிவிட்டன. அவற்றைப் படித்த தமிழர், அவற்றைத் தமிழில் மொழிபெயர்க்கத் தலைப்பட்டனர். மொழிபெயர்ப்புக் கதைகள் மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தன. ஆங்கிலம், பிரெஞ்சு, ரஷியா, வங்காளி முதலிய மொழிகளின் கதைகளே பெரும்பாலும் தமிழர் கற்கும் கதைகளாக இருந்தன. அதனால், தமிழ்மொழியில் இந்தப் புதிய இலக்கிய வகை தனக்கென ஒரு பெற்றியோடு வளர்வதற்கு முன்பே பிற நாட்டுக் கதைகள் வந்து வழி வகுத்தன என்று கூறலாம். அவற்றின் செல்வாக்கே தமிழ் நாவல்களில் மிகுந்தது எனலாம் என்பது இவ்வுண்மையை உணர்த்தும் (இலக்கிய மரபு, மு. வரதராசனார், ப. 160).

மொழிபெயர்ப்புகளால் தமிழ் பெற்றுள்ள சிறப்பினை, வளர்ச்சியை இரு நிலைகளில் காணலாம். பிற மொழிகளில் இருந்து தமிழுக்கு வந்தவை. தமிழ்மொழியில் இருந்து பிறமொழிக்கு மாற்றம் பெற்றவை என்பன அவை. இவற்றிற்கு இங்குத் தரப்படும் கருத்துகள்இந் நூற்றொகையின்படிக் கொண்ட முடிவுகளாகும்.

### *பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தவை*

தமிழின் முதல் மொழிபெயர்ப்பு நூல் எது என்பது தெளிவாக அறிய முடியவில்லை. தமிழுடன் பல்லாண்டு காலமாகத் தொடர்பு கொண்டிருப்பது வடமொழி என்பதால் முதல் தழுவல் பெயர்ப்பு நூல் இதிலிருந்தே வந்திருக்கலாம். "மாபாரதம் தமிழ்ப்படுத்தியும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்'' என்னும் மெய்க்கீர்த்திக் கூற்று இதற்குச் சான்றாகின்றது.

பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தவற்றுள் ஆங்கிலம், மலையாளம், வங்காளம், ரஷியன் ஆகிய மொழி நூல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. இவற்றுள் ஆங்கிலம் பரவலாக எல்லாத் துறைகளிலும் மொழி மாற்றம் அடைந்துள்ள சிறப்பினைப் பெறுகின்றது. மலையாளம், வங்காளம், புதினம், சிறுகதை போன்றவற்றிலும், ரஷியன் மொழி, புதினம், சிறுகதை, அரசியல் ஆகியவற்றிலும் மிகுதியாக மொழிமாற்றம் பெற்றுள்ளன.

காந்தியடிகள், விவேகானந்தர், தாகூர், காண்டேகர், புஷ்கின், சரத்சந்திரர், ஷேக்ஸ்பியர், டால்ஸ்டாய், பங்கிம் சந்திரச் சாட்டர்ஜி போன்றோர் படைப்புகள் ஏறக்குறைய முழுமையாகத் தமிழ்மொழியில் மாற்றம் பெற்றுள்ளன எனலாம்.

இலக்கியம் தவிரப் பிறதுறைகளில் அறிவியல், அரசியல், வரலாறு ஆகியன மொழிமாற்றம் பெற்றுள்ளன. 1950இல் பிளேட்டோ, ரூஸ்ஸோ, டால்ஸ்டாய் மற்றும் பங்கிம் சந்திரச்சாட்டர்ஜி, தாகூர், பிரேம்சந்த், சரத்சந்த் சாட்டர்ஜி, வி.ஸ. காண்டேகர் முதலியவர்களுடைய நூல்கள் தமிழில் மளமளவென்று இலாபத்தைக் கருதாமல் மொழிபெயர்க்கப் பெற்றுத் தமிழ் இலக்கியத்திற்கு வலிமை தந்தன. 1950க்குப் பின் மொழிபெயர்ப்பாளரின் ரசனையின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்களுக்குப் பதிலாகப் பணம் தரக்கூடிய நூல்களை மொழி பெயர்ப்பதில் ஈடுபட்டனர். இதுவரை சுமார் எழுபத்து மூன்று மொழிகளின் நூல்கள் தமிழில் பெயர்க்கப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது. மொழிபெயர்ப்பிற்கு நூல்களைத் தேர்வதில் சில சிறப்புகள் காணப்படுகின்றன. அவற்றுள் குறிப்பாக இரண்டைச் சுட்டலாம். மொழிபெயர்ப்பாளர் ஒரு மொழியில் தம்மைக் கவர்ந்த ஆசிரியர் என்ற முறையில் அவர் நூலை மொழிபெயர்த்தல் ஒன்றாம். இக்கூற்றிற்குச் சான்றாக, கௌரி கிருபானந்தன், சுசீலா கனகதுர்கா ஆகியோர் எண்டமூரி வீரேந்திர நாத்தையும், கா.ஸ்ரீ.ஸ்ரீ. வி.ஸ. காண்டேகரையும் மொழிபெயர்ப்பதில் கொண்ட ஈடுபாட்டைச் சுட்டலாம். ஒரு மொழியில் மிகுந்த செல்வாக்கு பெற்றநூல் என்பதால் மொழிபெயர்த்தல் இரண்டாவதாம். ஷேக்ஸ்பியர் நாடகங்களையும் டால்ஸ்டாயின் புதினங்களையும் இதற்குச் சான்றுகளாக்கலாம்.

ஒரு இனத்தவரின் வாழ்க்கை முறை, நாகரிகம், பழக்க வழக்கங்கள், பண்பாடு போன்றவற்றை இயம்ப மற்றும் ஒரு மொழியின் இலக்கிய வளத்தினைக் காட்ட எனும் நோக்கத்தோடு மொழிபெயர்ப்புகள் எழுகின்றன. இருபது கன்னடச் சிறுகதைகள் (ஜி. வேங்கட சுப்பையா + பி.சி. இராமச்சந்திர சர்மா), தெலுங்கு ஓரங்க நாடகங்கள் போன்ற தொகுப்புகளால் நிறைவுறுகிறது. இலக்கிய மொழிபெயர்ப்புகளின் அமைப்பு பற்றியும் சில கருத்துகள் கிடைக்கின்றன. தனிப்பட்ட நூலாக (எனது இந்தியா - ஜிம் கார்பெட்) அல்லது தொகுப்பு நூலாக இவை அமைகின்றன. தொகுப்பு நூல்கள் மூவகையாக அமைதல் குறிப்பிடற்பாலது.

1. ஒரே மொழி இலக்கியங்கள் தொகுப்பு
(இரண்டு பிரெஞ்சு நாடகங்கள் - ரமேஷ் - பிரேம்)

2. குறிப்பிட்ட ஆசிரியரின் நூல்கள் தொகுப்பு
(ஈசாப் நீதிக்கதைகள் - ஹேமாநரசிம்மன்)

3. பலமொழி இலக்கியங்களின் தொகுப்பு
(பன்மொழிக் கதைப் பூக்கள் - ராஜேஸ்வரி கோதண்டம்)

அமைப்பு என்று பார்க்கும்போது இவற்றுள் அமையும் முன்னுரைகள் இன்றியமையா இடம்பெறுகின்றன. சில நூல்களில் மூலநூலில் அமைந்துள்ள நூலாசிரியர் உரை, மூலநூலின் மற்றும் கதைகளின் பெயர், அறிமுகவுரை போன்றனவும் மொழி பெயர்த்துக் கொடுக்கப்பட்டுள்ளது (தெலுங்குச் சிறுகதைகள் - சாகித்திய அக்காதெமி படைப்புகளில் இவை சிறப்பாக அமைந்துள்ளன).

மூலநூலாசிரியர் பற்றியோ, நூல் பற்றியோ எத்தகைய குறிப்பும் இன்றி அமையும் மொழிபெயர்ப்புகளும் உண்டு. (ஆரியரைத் தேடி, ஆர்.எஸ். சர்மா, கி. இரா. சங்கரன், என்.சி.பி.எச்., சென்னை, 2003). இதனால் மூலநூல், இலக்கிய வகை போன்றவற்றிலும் சுருக்கமா? விரிவா? தழுவலா என அதன் இயல்பை உணர்வதிலும் தடங்கல் ஏற்படுகிறது. இக்குறைபாடு மொழிபெயர்ப்பாளரால் தவிர்க்கப்பட வேண்டியதாகும்.

மொழிபெயர்ப்பு நேரிடையாக மூலமொழியிலிருந்து அமையாமல் ஊடுமொழியாக ஆங்கிலம் போன்றவற்றின் மூலம் தோன்றுதல் மிகுதியான நூல்களில் காணப்படுகிறது. இதற்கு ஆங்கிலமே மிகுதியும் பயன்பட்டுள்ளது. ஒரே நூல் பலராலும் பல வடிவங்களில் மொழிபெயர்க்கப்படும் சிறப்பினையும் மகாபாரதம், கீதாஞ்சலி, சேக்ஸ்பியர் நாடகங்கள் போன்றன பெறுகின்றன.

தனிப்பட்ட நபர்கள் மொழிபெயர்ப்பில் ஈடுபட்டிருப்பதுடன், இதழ்களும், நிறுவனங்களும் இப்பணியில் பெருந்தொண்டாற்றியுள்ளன. தமிழ் மொழிபெயர்ப்பு வரலாற்றில் பதிப்பகங்களின் பணி இன்றியமையாத ஓரிடத்தை வகிப்பது, தனித்துச் சிறப்பிக்கப்பட வேண்டியதாகும். மைய, மாநில அரசு நிறுவனங்களும், தனியார் நிறுவனங்களும் இதில் பெரிதும் ஈடுபாடு காட்டுகின்றன.

பாரதி புத்தகாலயம் கடந்த சில ஆண்டுகளாக மொழிபெயர்ப்புத் துறையில் தனக்கென ஓரிடத்தை வகித்து வருகின்றது. மொழிபெயர்ப்புக் கட்டுரைகள் அதிக அளவில் இப்பதிப்பகத்தாரால் வெளியிடப்படுகின்றன. வாழ்க்கை வரலாற்று பெயர்ப்பு வெளியீடுகளுக்கும் இப்பதிப்பகம் இடம் கொடுக்கின்றது.

1948இல் தொடங்கப்பட்ட நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் 1956 முதல் தமிழ்நூல் வெளியீட்டில் ஈடுபாடு கொண்டுள்ளது. இப்பதிப்பகம் பெரும்பான்மையான ரஷிய மொழி நூல்களின் தமிழ் மொழி

பெயர்ப்பினை வெளியிடுகிறது. நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா 1957ஆம் ஆண்டு இந்திய அரசால் அமைக்கப்பட்டது. நாட்டின் மக்களிடையே மேலும் மேலும் புத்தக உணர்வை இயக்கமாக வளர்ப்பதே அதன் நோக்கம். இது வெளியிடும் இலக்கிய மொழிபெயர்ப்புகளில் அந்நூல் பற்றிய பொதுவான திறனாய்வு ஒன்று அமைந்திருத்தல் சிறப்பாகும். இந்தியாவின் அனைத்து மொழிகளிலும் நூல்களைப் பரிமாற்றம் செய்வது இந்நிறுவனத்தின் உயர்ந்த முதன்மையான குறிக்கோளாகும். சாகித்திய அக்காதெமி 1954ஆம் ஆண்டு மார்ச் 12இல் நடுவண் அரசால் உருவாக்கப்பட்டது. இந்தியாவின் இலக்கிய வளம் பெற்ற மொழிகள் அனைத்தினின்றும் முதன்மையான நூல்களைத் தேர்ந்து அவற்றைப் பிற இந்திய மொழிகளில் தருவதில் ஈடுபட்டுள்ளது. இலக்கியச் சிற்பிகள் எனும் வரிசை இதில் குறிப்பிடற்பாலது. தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் எனும் நான்கு மொழியிலிருந்து நூல்களை 1966இல் துவங்கிய தென்னிந்திய புத்தக நிறுவனம் வெளியிட்டது. இந்நிறுவனமும் பல சிறந்த உலக நூல்களைத் தமிழ்மொழியில் தந்துள்ளது.

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் மிகுதியான மொழிபெயர்ப்பினை, பல மொழிகளினின்றும் வெளியிட்டுள்ளது.

தாய்மொழி மூலம் கல்வி கற்பித்தல் என்ற திட்டத்தின் காரணத்தால் பல துறைகளிலிருந்தும் பாடநூல்கள் மொழி பெயர்க்கப்படத் தமிழக அரசின் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் பணிபுரிகிறது.

## தமிழிலிருந்து பிறமொழிகளுக்குச் சென்றவை

பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தனவற்றை அறியக் கூடிய வாய்ப்பை விட இவற்றை அறிய உதவும் வாய்ப்பு மிகக் குறைவு. சுமார் நூறுக்கு மேற்பட்ட நூல்கள் தமிழை மூலமாகக் கொண்டுள்ளன. பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தவற்றுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது இவ்வெண்ணிக்கை மிகக் குறைவாகத் தோன்றலாம். இவ்வெண்ணிக்கை இன்னும் அதிகமாக இருக்க வாய்ப்புள்ளது. அந்தந்த மொழிகளிலுள்ள மொழிபெயர்ப்புகளைத் தனித்தனியே தொகுக்கும்போதுதான் அவற்றுள் தமிழ்மொழியின் பங்கு என்ன என்பதனைத் தெளிவாக உணர இயலும்.

கிடைப்பனவற்றுள் நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் சங்க நூல்கள் அதிகளவில் மொழிபெயர்ப்பாகி வந்துள்ளன. பக்தி இலக்கியத்தில் கம்பராமாயணம் அதிகளவில் பெயர்ப்பாகி வந்துள்ளது. காப்பியங்களில் சிலம்பு, மேகலை, சூடாமணி, நளவெண்பா போன்றவை ஒவ்வொன்று மட்டும் பெயர்ப்பாகி சென்றுள்ளன.

பல, சிறப்பு வாய்ந்த படைப்புகளைத் தமிழகம் கொண்டுள்ள போதிலும் அவை சரிவர வெளி உலகிற்கு இன்னும் எடுத்துக்காட்டப்படவில்லை என்பது வருந்துதற்குரியது. அதற்கான முயற்சிகள் தற்போது ஆங்காங்கே நடைபெற்று வருகின்றன. இம்முயற்சி தொடர்ந்து நடைபெற்றால் உலகில் தமிழின் தனிச்சிறப்பு நிலை நாட்டப்படும். பிறமொழிகளிலிருந்து சிறப்புப் படைப்புகளைத் தமிழுக்குத் தருவதில் ஆர்வங்காட்டும் மொழிபெயர்ச்சியாளர்கள் தமது பெருமையுடைய படைப்புகளை அம்மொழிகளில் கொணர்வதிலும் காட்டுதல் இக்குறைபாட்டினைப் பெருமளவு நீக்கும் எனலாம்.

தமிழிலிருந்து பிறமொழிக்குச் சென்ற நூல்களை நோக்கும் போது ஆங்கிலத்திலேயே மிகுதியாக நூல்கள் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. பிறமொழிகளில் இந்திய மொழிகளான மலையாளமும், தெலுங்கும் முன் நிற்கின்றன.

> *"தமிழரின் பெருமை அவரது நீதி நூல்களேயாம் அவைகள் எழுதப்பட்டுள்ள அமைப்பும், அதன் கருத்துகளும் சீர்படைத்தன. நினைவிற்பதியும் சிறுவாக்கியங்கள் ஒரு வரியாக, இரு வரிகளாக அல்லது நான்கு வரிகளாய் அமைந்துள்ளன.*

உவமைகளையும் உருவகங்களையும் கொண்டதாய், வாழ்வு முறைத் தத்துவங்களை விளக்குகின்றன எனும் ஹில்கோ வியார்டோ ஷோமரூஸ் எனும் செர்மானிய அறிஞரின் பாராட்டுதலும் சுட்டற்பாலது. "கீதை உலக வாழ்வினையொத்து செயற்துடிப்பு மிக்க வாழ்வில் விடாமுயற்சியைக் கட்டாயமாக்கி, வைராக்கியமுடைய ஒரு நிலையை வலியுறுத்துகிறது. ஆனால் குறளில்தான் எத்தனை முன்னேற்றம் குறளின்படி ஒருவன் செய்யும் எத்தொழிலும் தன்னளவில் உயர்ந்ததாயும் உன்னதமாயும் அமைகிறது எனும் ஆல்பர்ட் ஷ்வைட்ஸரின் கருத்து தமிழருக்குப் பெருமிதம் அளிப்பது.

(மொழிபெயர்ப்பு நூற்றொகை, ச. சிவகாமி, ப. lviii).

மேனாட்டு மொழிபெயர்ப்பாளர்கள் தமிழின் பெருமை உணர்ந்து கூறியுள்ள செய்திகள் எண்ணத்தக்கன.

## தமிழில் மொழிமாற்றம் பெற்றுள்ள மொழிகள்

(எண்கள் - நூல்களின் மொத்த எண்ணிக்கை)

| | | |
|---|---|---|
| 1. | அர்ஜெண்டினா | 1 |
| 2. | அரபி | 116 |
| 3. | அல்பேனியம் | 1 |
| 4. | அஸ்ஸாம் | 9 |
| 5. | ஆங்கிலம் | 606 |
| 6. | ஆப்பிரிக்கன் | 8 |
| 7. | ஆஸ்திரியா | 4 |
| 8. | இங்கிலாந்து | 1 |
| 9. | இத்தாலி | 12 |
| 10. | இந்தி | 67 |
| 11. | இலத்தீன் | 3 |
| 12. | இலத்தீன்அமெரிக்கா | 2 |
| 13. | ஈராக்கியம் | 4 |
| 14. | உருது | 24 |
| 15. | ஒரியா | 9 |
| 16. | கன்னடம் | 74 |
| 17. | காஷ்மீர் | 3 |
| 18. | கிரேக்கம் | 18 |
| 19. | குஜராத்தி | 9 |
| 20. | கென்யா | 2 |
| 21. | கொங்கணி | 1 |
| 22. | கொரியா | 1 |
| 23. | சிங்களம் | 3 |
| 24. | சிந்தி | 4 |
| 25. | சிராய்கி | 1 |
| 26. | சீனம் | 34 |
| 27. | சுவீடன் | 59 |
| 28. | செக்கோஸ்லோவியா | 1 |
| 29. | செர்பியன் | 1 |
| 30. | டேனிஸ் | 2 |

| | | | |
|---|---|---|---|
| 31. டோக்ரி | 4 | 46. பிராகிருதம் | 1 |
| 32. துருக்கி | 33 | 47. பிரெஞ்சு | 83 |
| 33. தெலுங்கு | 92 | 48. ஃபிளெமிஷ் | 1 |
| 34.தென்கிழக்கு ஆசியா | 2 | 49. பின்னிஷ் | 2 |
| 35. நார்வே | 1 | 50. பெல்ஜியம் | 1 |
| 36.நேபாளி | 3 | 51. மராத்தி | 22 |
| 37.நைஜீரியா | 1 | 52. மலையாளம் | 195 |
| 38.பங்களாதேஷ் | 1 | 53. மைதிலி | 3 |
| 39.பஞ்சாப் | 3 | 54. ரஷ்யா | 157 |
| 40.பர்மியம் | 2 | 55. வங்காளம் | 101 |
| 41. பல்கேரியா | 2 | 56. வடமொழி | 118 |
| 42. பாகிஸ்தான் | 2 | 57. ஸ்பானிஷ் | 8 |
| 43. பாரசீகம் | 5 | 58.ஸ்வீடிஷ் | 8 |
| 44. பாலஸ்தீனம் | 2 | 59. ஹீப்ரு | 1 |
| 45. பாலி | 1 | 60. ஜப்பான் | 11 |
| | | 61. ஜெர்மன் | 14 |

*61 மொழிகளிலிருந்து பெயர்க்கப்பட்ட மொழிபெயர்ப்பு நூல்களின் எண்ணிக்கை கொடுக்கப்பட்டுள்ளன. இம்மொழிகளைத் தவிர உக்ரைன், எபிரேயம், கிர்கீஸ், பிலோரஸ், போலிஷ், மெக்ஸிகன், யுகோஸ்லாவின், வியட்நாமிஸ், சௌராஷ்டிரம் (மொழிபெயர்ப்பு நூற்றொகை, ச. சிவகாமி, ப. LXI*

*மேலும் ஹங்கேரி, ருமேனியா (தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம், ந. முருகேசப்பாண்டியன்)*

*61 + 9 + 2 = 72 மொழிகள் தற்போது எழுத்து வழக்கிலுள்ளமைச் சுட்டத்தக்கது.*

# மொழிபெயர்ப்பு நூற்றொகை வரிசை

மொழிபெயர்ப்புத்துறை உலகளவில் வளர்ந்துவரும் ஒரு துறையாகவும், தமிழ்மொழியில் விரிந்த அளவில் காணப்படும் ஒரு துறையாகவும் பல சிறப்புகளை ஒருங்கே கொண்ட துறையாகவும் விளங்குவதால் இந்நூற்றொகைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது. ஒரு குறிப்பிட்ட துறை பற்றிய பொதுவான கண்ணோட்டத்திற்கு நூற்றொகைகள் பெரிதும் பயன்படுகின்றன. ஒரு மொழி பெற்றுள்ள வளர்ச்சியை அளவிடவும் இவை மொழி பெற்றுள்ள வளர்ச்சியை அளவிடவும் இவை உதவுகின்றன. தமிழ் பல்வேறு துறைகளில் பெற்றுள்ள வளம் அல்லது வறுமையை அறுதியிட இந்நூற் றொகைகள் பயன்படுகின்றன.

தொகுப்புக்கலை தமிழில் மிகப் பழங்காலத்திலேயே சிறப்புற்றிருந்தமையைச் சங்கத் தொகை நூல்கள் உணர்த்தும். தண்டியின்,

*தொகை கலைச்செய்யுள் தோன்றக் கூறின்*
*ஒருவர் உரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்*
*பொருள் இடம் காலம் தொழில்என நான்கினும்*
*பாட்டினும் அளவினும் காட்டியவாகும்*

(பொதுவணி 5)

எனும் நூற்பா இங்கு எண்ணத்தக்கது.

சங்க இலக்கியங்களான பாட்டும், தொகையும் பாடற் றொகுப்பு நிலையினைக் காட்டிய போதிலும் நூற்றொகுப்பினை மிகப் பிற்காலத்தில்தான் காண முடிகிறது. 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கர்னல், மெக்கன்சி என்பார் தென் நாட்டின் பல இடங்களில் இருந்த பழைய தமிழ்ச் சுவடிகளைத் தேடிப் பிடித்துப் பட்டியல் செய்து வைத்தார் (ச. சிவகாமி, மொழிபெயர்ப்பு நூற்றொகை, ப. Lxiii).

1865இல் ஜான் மர்டாக் எனும் ஐரோப்பியர் 'Classified Catalogue of Tamil Printed Books with Introductory Notices' எனும் பெயரில் ஒரு தொகுப்பினை அளித்துள்ளார். இதனுள் நூலின் பெயர் தவிர ஏனைய குறிப்புகளை ஆங்கிலத்தில் தந்துள்ளனர். மனோன்மணியம் படைத்த சுந்தரம்பிள்ளையின் நூற்றொகை விளக்கம், க.சி. கந்தையா பிள்ளையின் இலக்கிய அகராதி போன்றனவும் முன் நூல்களாகும்.

தமிழில் வெளியிடப்பட்டுள்ள பொது நூற்றொகைகளில் மொழிபெயர்ப்பு நூல்கள் பற்றிய தகவல்கள் இடம்பெற்றுள்ளன. அவை

பின்வருமாறு:

"தமிழ்நாட்டு நூற்றொகை: தமிழ் என்ற குறிப்பு நூல் சென்னை பொதுநூலக நெறியாளருக்காகச் சென்னை கன்னிமாரா நூலகரால் 1960ஆம் ஆண்டு முதலாகத் தொடர்ந்து ஆண்டுதோறும் வெளியிடப்படுகிறது. இதில் மொழிபெயர்க்கப் பட்ட பிறநாட்டு இலக்கியப் படைப்புகள் பற்றிய தகவல்கள் இடம்பெற்றுள்ளன.

தமிழ்நாட்டு அரசினர் தமிழ் வளர்ச்சி மன்ற வெளியீடாக 1961ஆம் ஆண்டில் முதன்முதலாகத் 'தமிழ் நூல் விவர அட்டவணை' வெளியிடப்பட்டது. இவ்வட்டவணையில் தமிழில் பெயர்க்கப் பட்ட பிறநாட்டு இலக்கியப் படைப்புகள் குறித்த தகவல்கள் இடம்பெற்றுள்ளன.

சாகித்திய அகாதெமி நிறுவனத்தால் 1974ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட "இந்திய இலக்கிய தேசிய நூற்றொகை' என்ற நூலிலும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட பிறநாட்டு இலக்கிய படைப்புகள் பற்றிய தகவல்கள் உள்ளன.

இந்தியாவிலுள்ள மையக் குறிப்பு நூலகம், ஒவ்வொரு ஆண்டிலும் வெளியிட்டுள்ள 'இந்திய தேசிய நூற்றொகை'யில் தமிழ் மொழிபெயர்ப்பு நூல்கள் பற்றிய தகவல்கள் உள்ளன.

1985ஆம் ஆண்டு கல்கத்தாவிலுள்ள மையக் குறிப்பு நூலகம் வெளியிட்டுள்ள 'இந்திய தேசிய நூல் விவரப பட்டியல் தமிழ்' என்ற குறிப்பு நூலில் மொழிபெயர்ப்பான இலக்கிய நூல் பட்டியல் இடம்பெற்றுள்ளது.

இதுவரை பொது நூற்றொகையில் மொழிபெயர்ப்பு நூல்கள் பற்றிய தகவல்கள் இடம்பெற்றன. இந்நூற்றொகைகள் குறிப்பிட்ட கால அளவினை மையமாகக் கொண்டு தொகுக்கப் பட்டுள்ளன. அக்கால எல்லைக்குள் வரும் மறுபதிப்புகளும் மீண்டும் இடம்பெறுகின்றன. எனவே முழுநிலையில் தமிழ்மொழியின் நூல் வெளியீடு பற்றிய முழுமையான அறிவினைப் பெறுவதற்கு இடர்ப்பாடாகிறது. இதனால் தமிழ்மொழிக்கு இதுவரை வெளி வந்துள்ள நூல்கள் பற்றிய முழுமையான தொகுப்பு ஒன்றன் தேவை உணரப்படுகின்றது. அதனை நிறைவேற்றும் முயற்சியின் முதற்படியாக 1983இல் மொழிபெயர்ப்பு நூல்களைத் தொகுத்து தர எண்ணி "மொழிபெயர்ப்பு நூற்றொகை (Bibliography on Translation) என்ற நூலை ச. சிவகாமி எழுதினார். இந்நூல் சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாரால் வெளியிடப்பட்டு தமிழிலிருந்து பிறமொழிக்கும் பிறமொழியிலிருந்து தமிழுக்கும் மொழிபெயர்க்கப்பட்ட இலக்கியப் படைப்புகளின் விரிவான அட்டவணை இந்நூலில்

இடம்பெற்றுள்ளது. மொழிபெயர்ப்பு நூற்களின் நூற்றொகை தயாரிப்பில் இந்நூலினை முன்னோடியாகக் கருதலாம். அதே ஆண்டு ச.வே. சுப்பிரமணியம் எழுதிய 'திராவிட மொழி இலக்கிய அறிமுகம்' என்ற தலைப்பில், தமிழ் மொழிபெயர்ப்பு நூற்கள் பற்றிய அட்டவணை, அறிமுக நிலையில் மேலோட்டமாகத் தரப்பட்டுள்ளது. இந்நூலும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாரால் வெளியிடப்பட்டது.

1990ஆம் ஆண்டு சக்திப்பெருமாளின் 'தமிழ் நாடக வரலாறு' என்ற நூலின் பிற்சேர்க்கை VIஇல் "தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ள "ஷேக்ஸ்பியர் நாடகங்கள்" என்ற தலைப்பின் கீழ் தமிழில் பெயர்க்கப்பட்டு வெளியாகியுள்ள எண்பத்தேழு நாடகங்களின் அட்டவணைத் தரப்பட்டுள்ளது. அதே நூலில் பிற்சேர்க்கை VIIIஇல் "பிறமொழிகளிலிருந்து தமிழில் மொழியாக்கம் பெற்ற நாடகங்கள்" என்ற தலைப்பின் கீழ் தமிழில் பெயர்க்கப்பட்டு வெளியாகியுள்ள முப்பத்தொன்பது பிறநாட்டு இலக்கிய நாடகநூல்களின் அட்டவணை தரப்பட்டுள்ளது. இவ்விரு அட்டவணைகளிலும் ஆண்டு, பதிப்பகம், இடம் போன்ற தகவல்கள் முழுமையாக இல்லை.

1992ஆம் ஆண்டு மு. வளர்மதியின் 'தமிழ் மொழி பெயர்ப்பில் வரலாற்று நூல்கள்' என்ற முனைவர் பட்ட ஆய்வேடு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்குத் தரப்பட்டது. இவ்வாய்வேட்டில் மொழிபெயர்ப்பு வரலாற்று நூற்றொகை இடம்பெற்றுள்ளது.

1994ஆம் ஆண்டு பழநி அரங்கசாமியின் "தமிழில் ஷேக்ஸ்பியர் ஒரு மதிப்பீடு" என்ற ஆங்கில நூலின் பின்னிணைப்பில் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியாகியுள்ள ஷேக்ஸ்பியர் நாடக நூற்களில் அறுபத்தைந்து நூல்கள் பற்றிய தகவல்கள் அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

இந்நூற்றொகையின் நோக்கம், தமிழ்மொழி பிற இந்திய, உலக மொழிகளுக்கு வழங்கியுள்ளமை அவற்றிலிருந்து தமிழ் பெற்றுக் கொண்டுள்ளமை எனும் இரு நிலைகளிலும் (ச. சிவகாமியின் மொழிபெயர்ப்பு நூற்றொகை எனும் நூலினை அடியொற்றி 1980-2005 வரை) படைக்கப்பட்டுள்ள நூல்களைத் தொகுப்பதாகும்.

பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தவை முதற்பகுதியிலும், தமிழிலிருந்து பிறமொழிகட்குச் சென்றவை இரண்டாம் பகுதியிலும் அமைந்துள்ளன. நூலின் பயன்பாட்டு எளிமை கருதி, இரு பிரிவுகளின் அமைப்பு நிலையும் கொடுக்கப்பட்டுள்ளன. சுமார் 2340க்கு மேற்பட்ட நூல்கள் மொழிபெயர்ப்புகளாக அமைகின்றன.

## பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தவை

- இலக்கியம், அரசியல், கல்வி, பொருளாதாரம் எனப் பொருள் அடிப்படையில் தனித்தனியே மொழிபெயர்ப்பு நூல்கள் முதலில் பகுக்கப்பட்டுள்ளன.
- ஆண்டுகள் அடிப்படையில் மூலமொழியினை அகரவரிசை யினின்றும் ஒவ்வொன்றின் கீழும் அம்மொழியினின்றும் மொழிபெயர்க்கப்பட்ட நூல்கள் அகரவரிசைப்படுத்தப் பட்டுள்ளன.
- குறிப்பிட்ட மொழிபெயர்ப்பின் மூலமொழி அறிய இயலாதபோது குறிப்பிட்ட ஆண்டின் இறுதியில் மூலமறியப்படாதவை' என்பதன் கீழ் கொடுக்கப்பட்டுள்ளன.
- ஆண்டறியப்படாதவை, ஆண்டும் மூலமும் அறியப்படாதவை அகரவரிசைப்படுத்தப்பட்டு அப்பகுப்பின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.
- ஒவ்வொரு குறிப்பும் மொழிபெயர்ப்புத் தலைப்பு, மூலநூலாசிரியர், மொழிபெயர்ப்பாளர், பதிப்பகம், இடம், பக்கம் எனும் செய்திகளின் தொடர்ச்சியாக அமைகின்றன. இவற்றுள் ஏதேனும் ஒன்று பற்றிய விளக்கம் அறியப்படாது இருப்பின் அதற்குரிய இடம் கோடிட்டு விடப்பட்டுள்ளது.

  2293, இதயவிழிகள், மாலதி செந்தூர்,
  சாந்தாதத், சாகித்திய அக்காதெமி, சென்னை, 443.

  என்பது போன்று அமைந்துள்ளன.
- ஒரே நூலுக்குப் பல பதிப்புகளிருப்பின் அறிந்தவரையில் அவையும் சுட்டப்பட்டுள்ளன.
- பொருளடிப்படையில் பகுக்க இயலாதன இறுதியில் எஞ்சியன எனும் பகுப்பின் கீழ் அகரவரிசைப்படுத்தப் பட்டுள்ளன.

## தமிழிலிருந்து பிறமொழிகளுக்குச் சென்றவை

1. ஆண்டுகள் அடிப்படையில் நூல்கள் ஆங்கிலத்தில் அகரவரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

2. தமிழ்மொழியில் அந்நூல்கள் எழுந்த காலம் கருத்தும் கொண்டு தொகுப்பு அமைந்துள்ளது.

1. சங்கம், 2. நீதி இலக்கியம், 3. காப்பியம், 4. பக்தியிலக்கியம், 5. நாவல், 6. நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், 7. இலக்கணம்.

பொதுநிலையிலும் சில கருத்துகளை வெளியிடல் தேவையாகிறது. நூலினுள் ஒரே ஆசிரியரின் பெயர் பல்வேறு ஒலிக்குறிப்புகளில் குறிக்கப்பட்டுள்ளது. இந்நூல் தொகுப்பு ஆதலின் தொகுப்பாசிரியருக்குச் செய்திகள் பல்வேறு மூலங்களி லிருந்து கிடைத்ததால் அவர் எவ்வாறு குறிப்பிட்டுள்ளாரோ அவ்வாறே தரப்பட்டுள்ளது.

எனவே அப்பெயர்களிடையே ஒலிக்குறிப்புபிலிருந்த ஓர் ஒற்றுமையைத் தர இயலவில்லை. மேலும் பெயர் சுருக்கங்களும் காணப்படுகின்றன. சான்றாக லியோடால்ஸ்டாய். டால்ஸ்டாய் (அ) லியோ டால்ஸ்டாய் என்றும் ரவீந்திரநாத் தாகுர் என்பது ரவீந்திரநாத் தாகூர், தாகுர், டாகுர் என அமைந்திருப்பதனைச் சுட்டலாம். இயன்ற வரையில் நூலாசிரியர் அகர வரிசையில் இவ்வேறுபாடு களையப்பட்டு ஒரே ஒலிக்குறிப்பின் கீழ் அவர்தம் நூல்கள் குறிக்கப்பட்டுள்ளன.

பயன்பாட்டெளிமைக் குறித்து ஒவ்வொரு பிரிவிற்கும் எனத் தனித்த எண்கள் அளிக்காது, எல்லாவற்றிற்கும் இணைந்து தொடர்ச்சியாகவே 'தொடர் எண்கள்' வழங்கப்பட்டுள்ளன.

இந்நூற்றொகையில் மொழிபெயர்ப்பு நூல்கள் அனைத்தும் இடம்பெற்றுள்ளன என்று கூறுதற்கில்லை. இயன்ற வரையில், கிடைத்த நூல்கள் அனைத்தும் ஆண்டு அடிப்படையில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. தேடலின் பயனாக நூல்களின் எண்ணிக்கை அதிகரிக்கவும் வாய்ப்புள்ளது.

# நிறைவுரை

தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட பிறநாட்டு இலக்கியப் படைப்புகளின் நூற்றொகையில் தொகுக்கப்பட்டுள்ள மொழிபெயர்ப்பு நூற்களின் பல்வேறு கூறுகளை விரிவாக ஆய்ந்து கண்டறியப்பட்ட முடிவுகள், இங்கு தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

மொழிமாற்றம் பெற்றுள்ள மொழிகளுள் ஆங்கிலம் (60%) முதன்மை இடம்பெறுகின்றது. அதற்கடுத்த நிலையில் மலையாளம் (19.5%) உள்ளது. மூன்றாவதாக ரஷ்யா (15.7%) இடம் பெற்றுள்ளது. அதற்கடுத்தடுத்து வடமொழி (11.8%), அரபி (11.6%) தெலுங்கு (9,2%). பிரெஞ்சு (8.3%), கன்னடம் (7.4%), இந்தி (6.7%) போன்ற மொழிகள் உள்ளன.

சமயம், சிறுகதை, நாவல், நாடகம், வாழ்க்கை வரலாறு, கட்டுரை, அரசியல, மருத்துவம் போன்ற துறைகளுள் நாவல் இலக்கியத்துறை (378) முதன்மை வகிக்கிறது. அதற்கடுத்த நிலையில் சிறுகதை இலக்கியத் துறை (270), சமயம் (263), கட்டுரை (182), கவிதை (144), நாடகம் (131) போன்ற துறைகள் உள்ளன.

தாகூர், கலீல்ஜிப்ரான், எண்டமூரி வீரேந்திரநாத், டால்ஸ்டாய், சேக்ஸ்பியர், கோட்டயம், தகழி போன்ற மூலாசிரியர்களுள் தாகூர் (44), முதன்மையிடம் பெறுகின்றார். சேக்ஸ்பியர் (40) இரண்டாம் இடத்தையும் எண்டமூரி வீரேந்திரநாத் (37) மூன்றாம் இடத்தையும் பெறுகின்றனர். அதற்கடுத்து கோட்டயம் புஷ்பநாத் (27), கலீல்ஜிப்ரான் (26), டால்ஸ்டாய் (22), ஸ்ரீசுவாமி சிவானந்தா (19), காளிதாசர் (14), தகழி சிவசங்கரன் பிள்ளை (13), மாக்ஸிம்கார்க்கி (13) போன்றோர்கள் உள்ளனர்.

மொழிபெயர்ப்பாசிரியர்களுள் சிவன் (59) முதன்மையில் உள்ளார். இரண்டாவதாக சுரா (39)வும், மூன்றாவதாக பூ. சோமசுந்தரமும் (31) உள்ளனர். அதற்கடுத்து நா. தர்மராஜன் (24), நா. முகம்மது செரிபு (23), சு. கிருஷ்ணமூர்த்தி (21), புவியரசு (20), ஏ.ஜி. எத்திராஜிலு (20), அரு. சோமசுந்தரம் (19), சுசீலா கனகதுர்கா (18), மு. குலாம் முஹம்மது (15), குறிஞ்சிவேலன் (13), த.நா. குமாரசாமி (13) போன்றவர்கள் உள்ளனர்.

பதிப்பகங்களுள் சாகித்திய அக்காதெமி, நேஷனல் புக் டிரஸ்ட், நியூ செஞ்சரி புக் ஹவுஸ், வம்சி புக் ஹவுஸ், பாரதி புத்தகாலயம், காலச்சுவடு, உயிர்மை போன்றவை மொழிபெயர்ப்பு நூல்களை வெளியிடுகின்றன. தமிழிலக்கியம் வளமடைய வேண்டுமெனில்

மொழிபெயர்ப்பு முயற்சிக்கு முக்கியத்துவம் தரப்பட வேண்டியது அவசியமாகும். அதன் முதற்கட்டமாக மொழிபெயர்ப்புக்கு என்றே 'திசைஎட்டும்' என்ற காலாண்டிதழ் குறிஞ்சி வேலன் அவர்களால் செப்டம்பர் 2003 முதல் வெளிவருவது பாராட்டற்குரியது. பள்ளி, கல்லூரி நிலைகளிலும் இதனை வளர்க்கத் தேர்வின் ஒரு பகுதியாக மொழிபெயர்ப்பு கொடுக்கப்பட்டு மாணவர்க்கு அதன் சிறப்பு உணர்த்தப்படுகிறது. வரும் காலங்களில் மொழிபெயர்ப்புகள் இன்னும் அதிகமாகவும், சிறப்பாகவும் வருவதற்குரிய சூழல்கள் இன்று காணப்படுகின்றன.

# 1980-2005ஆம் ஆண்டு மொழிபெயர்ப்பு நூல்கள்-அகரவரிசைப்பட்டியல்

## கட்டுரை

### *1980*

### *ஆங்கிலம்*

*1.* கூட்டுறவு குறித்து, வி.இ. லெனின், கே. ராமநாதன், என்.சி.பி.எச்., சென்னை, 76.

### *ரஷ்யா*

*2.* நான் எவ்வாறு எழுதக் கற்றுக் கொண்டேன், மாக்ஸிம் கார்க்கி, _____, என்.சி.பி.எச்., சென்னை, 158.

*3.* போரும் புனர்ஜென்மமும், லியோனாத் பிரேஷ்னேவின் நினைவுக் குறிப்புகள், _____, என்.சி.பி.எச்., சென்னை, 240.

4. மரங்கொத்திக் குஞ்சு, ஜெவாத்தெர்ஜமானவ், பூ. சோமசுந்தரம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 15.

### *மூலம் அறியப்படாதவை*

*5.* பாலர் ராமாயணம், மதுரம் பூதலிங்கம், ஆதவன் சுந்தரம், பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், தகவல் ஒலிபரப்பு அமைச்சகம், புதுதில்லி, 85.

6. கரப்பான் பூதம், கர்னேய் சுகோவ்ஸ்கு & சூ. புகரியோவா, பூ. சோமசுந்தரம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 20

7. லெனின் இளைஞர்களும் எதிர்காலமும், வி. தெஸ்யாட்டெரின் & ஏ. லாட்டிஷேவ், மு. பழனியப்பன், என்.சி.பி.எச்., சென்னை, 304.

8. பூனை, யூஷ்கா அலெக்சாந்தர் குப்ரீன், _____, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 25.

### *மூலம் அறியப்படாதவை*

9. மாக்கடல் மர்மங்கள் (லெமூரியாக் கண்டம்), அலெக்சாந்தர் கோந்த்ரதோவ், ஆர்.பி.எஸ்., என்.சி.பி.எச்., சென்னை, 126.

### *1982*

### *வங்காளம்*

*10.* பஞ்ச வியாசங்கள், தாகூர், பாரதியார், ஸ்ரீ புவனேஸ்வரி பதிப்பகம், சென்னை, 136.

*மூலம் அறியப்படாதவை*

*11.* எங்கே? எவருடன்? கே. இராஜகோபால், நெல்லை. எஸ். வேலாயுதம், என்.சி.பி.எச்., சென்னை, 324.

12. தெ.பொ.மீ.யின் மொழியியல் கட்டுரைகள், _____, சா. வளவன், _____, _____, அண்ணாமலை நகர்.

*ஸ்பானிஷ்*

13. மெக்ஸிகோவின் சுருக்கமான வரலாறு, தனியேல் கொஸியோவியோமொஸ் & அலைஹான்திரர் & மொரேனோதொஸ் கானோ ஜியில் & சொன்ஸாலெஸ் & இசொன்ஸாலெஸ் & எதுவார்தோ ப்ளாங்கெல், லொரென்ஸோ மெய்யர், ஜி. அருள். நேஷனல் ஆர்ட்ஸ் அக்காதெமி, நியூ தில்லி, 228.

*1983*

*ரஷ்யா*

14. தேர்வு நூல்கள், மார்க்ஸ் எங்கெல்ஸ், _____, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 124

*மூலம் அறியப்படாதவை*

15. நான் ஏன் கிறிஸ்துவனல்ல, பெட்ரண்ட் ரஸ்ஸல், எஸ். குருசாமி, பெரியார், சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம், சென்னை, 32.

*மூலம் அறியப்படாதவை*

16. மார்க்சியமும் புரட்சிகரமான எழுச்சியும், லெனின், _____, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 69.

*1984*

*மூலம் அறியப்படாதவை*

17. நான் ஏன் சத்திய வேதாகமத்தை நம்புகிறேன், ஹோமர்டங்கன், சாவித்திரி அற்புத மூர்த்தி, சாமுவேல் டானியேல், சென்னை, 48

*1985*

*ரஷ்யா*

18. பிளாட்டூன் தலைவர், அலெக்சாந்தர் பதேயெவ், பூ. சோமசுந்தரம், என்.சி.பி.எச்., சென்னை, 68

*மூலம் அறியப்படாதவை*

19. டாக்டர் இல்லாத இடத்தில், டேவிட் எர்னர், ப, சங்கரலிங்கம், க்ரியா, சென்னை, 498

20. மக்தூம் கிஷன்சந்தர், ராகுல்ஜி வாழ்க்கையும் படைப்பும், ராஜ் பகதூர் கௌர் & கே. ஏ. அப்பாஸ் & ஷ.எஸ். நரவனே & நா. தர்மராஜன், நெல்லை எஸ். வேலாயுதம், மீரா அச்சகம், புதுக்கோட்டை, 112.

21. வெற்றிகண்டு வருக, அலெக்சேய்லியோனவ், பூ. சோமசுந்தரம், ராதுகா பதிப்பகம், மாஸ்கோ, 55

### *1987*

### *மலையாளம்*

22. போருக்கு விடை கொடுப்போம். டி.பி. குஞ்சிக்கண்ணன், பாபு அம்பட்டு, சென்னை புக்ஸ், சென்னை, 71

### *மூலம் அறியப்படாதவை*

23. ஓவியன் எகோரியின் கதை, கியோர்கி யூகின், நா. முகம்மது செரீபு, ராதுகா பதிப்பகம், மாஸ்கோ, 108+4

24. காதரீன் மேயோவும் இந்தியாவும், மனோரஞ்சன் ஜா, வெங்கட்சாமிநாதன், என்.சி.பி.எச், சென்னை, 172

### *1988*

### *ஆங்கிலம்*

25. ஊழியனே உனக்கு, ஈவன் ஜிம்மி சுவாகர், எஸ்.டி. இன்னோசண்ட், ஜே.சாம், _____, ஜெபத்துனர், 40.

26. சமயம் பற்றி, ஜார்ஜ் தாம்சன், நேத்ரா, நேத்ரா வெளியீடு, சென்னை - 64.

27. சமூகநாவல்கள், இரா. தண்டாயுதம், சு. வேங்கடராமன், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 436.

### *மூலமறியப்படாதவை*

28. வங்காள மறுமலர்ச்சி முதலிய கட்டுரைகள், சுசோடன் சர்க்கார், ஆலால சுந்தரம், என்.சி.பி.எச்., சென்னை - 356.

### *1989*

### *மலையாளம்*

29. ஆறுமாதம் சிறையில் இருந்தேன், பாஸ்கரன், டேவிட் சித்தையா, பூங்கொடி பதிப்பகம், சென்னை 112.

### *வடமொழி*

30. பிரியதர்சிகை, ஹர்ஷதேவர், மு. முத்து வேங்கடாசலம், செல்வி பதிப்பகம், காரைக்குடி, 120 + xii.

*மூலம் அறியப்படாதவை*

31. அரசியலும் இராணுவ பலமும், தானீல் புரோயெக்தர், ____, ____, ____, 68.

32. ஆன்மீகம் ஒரு ஜீவநதி, டங்கன் கிரீன்ஸிஸ், ஜெயந்தி, இளவழகி பதிப்பகம், வாணியம்பாடி, 124.

33. காந்தியாருடன், நாத்திகப் பெரியார், கோரா சந்திப்பு, இலட்சுமிரதன் பாரதி, குருசாமி பதிப்பகம், வேலூர், 66

34. சுயராஜ்யத்தின் கதை பகுதி - 1, விஷ்ணுபிரபாகர், குயிலி-ராஜேஸ்வரி, என்பிடி, 64.

35. தூக்கம் வரவில்லை சிறுமி மாஷாவுக்கு, கலீனா லே பெதேவா, ____, ராதுகா பதிப்பகம், மாஸ்கோ, 12

*1990*

*மலையாளம்*

36. முழுமையைத் தேடும் முழுமையற்ற புள்ளிகள், வி.வி.சி. நாயர், குறிஞ்சிவேலன், மணியம் பதிப்பகம், குறிஞ்சிப்பாடி, 334.

37. ஜோகுமாரசாமி, சந்திரசேகரகம்பார், கி. நரசிம்மன், அபிநயா, சென்னை, 95.

*1991*

*ஆங்கிலம்*

38. கிங்லியர், ஷேக்ஸ்பியர், சிவன், அநுராகம் பதிப்பகம், சென்னை, 32.

39. யுத்தத்திற்கு ஓர் அழைப்பு, பால்டான் ஜே.பி. சந்திரன், ஜே. கல்யாணகுமார், ஜே. கல்யாணகுமார், சென்னை, 128 + viii

*வங்காளம்*

40. அமூல்யன், சரத்சந்திர சாட்டர்ஜி, த.நா. குமாரசாமி, அல்லயன்ஸ், சென்னை, 114 + 2.

41. ரவீந்திரரின் தேர்ந்தெடுத்த கட்டுரைகள், இரவீந்திரர், த.நா. குமாரசுவாமி & த.நா. சேனாபதி, சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 381

*மூலம் அறியப்படாதவை*

42. சிறுவன் தாகூர், லீலா மஜீம்தார், ரா.கி. ரங்கராஜன், என்.பி.டி., புதுதில்லி, 80.

43. தமிழகத்தில் தேசியம், தமிழக அரசியல் 1920-1980, எம். பக்தவச்சலம், தங்கஜெயராமன், தியாகி கே. பெருமாள் உடையார், சென்னை - 20.

*1992*

*ஆங்கிலம்*

44. காமதேனு, கேரி ஜேக்கப் & என். கிருஷ்ணமூர்த்தி & என். இராமகிருஷ்ணன், என்.அசோகன், மதர்ஸ் சர்வீஸ் சொஸைட்டி, பாண்டிச்சேரி, 317.

*மராட்டியம்*

45. தலித் இலக்கியமும் போக்கும் வரலாறும், அர்ஜுன் டாங்கோ, தி.அ. சதாசிவம், தாமரைச் செல்வி பதிப்பகம், சென்னை, 96.

*ஜெர்மன்*

46. விசாரணை, ப்ரன்ஸ்கஃப்கா, ஏ.வி. தனுஷ்கோடி & ஜி. கிருஷ்ணமூர்த்தி, _____, _____, 208.

*மூலம் அறியப்படாதவை*

47. கடல் ஓநாய், ஜாக்லண்டன், சிவன், அநுராகம் பதிப்பகம், சென்னை, 32.

48. குரங்கும் ஆப்பும் மற்றும் ஒரு கதையும், சங்கர் சித்திரக்காரர், ரேபோதி பூஷன், தம்பி சீனிவாசன், சில்ரன்ஸ் புக் டிரஸ்ட், புதுதில்லி, 24.

49. செல்வந்தர் ஆவது எப்படி, எம்.ஆர். காம்மேயர், ஸ்ரீநிவாச மூர்த்தி, கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, 448.

50. தண்ணீர் தொட்டி, பிரதிபா நாத், இந்திரா அனந்தகிருஷ்ணன், சில்ரன்ஸ் பதிப்பகம், புதுதில்லி, 26.

*1993*

*மலையாளம்*

51. உம்மாச்சு, உரூப், இளம்பாரதி, என்.பி.டி., புதுதில்லி, 337.

52. ஒரு நெஞ்சத்தின் ஓலம், மலையாற்றூர் இராமகிருஷ்ணன், குறிஞ்சிவேலன், அருள்புத்தக நிலையம், குறிஞ்சிப்பாடி, 159

*1994*

*அரபு*

53. கலீல் ஜிப்ரானின் ஞானிகளின் தோட்டம், கலீல் ஜிப்ரான், புவியரசு, கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, 127 + 1.

*ஆங்கிலம்*

54. பாரவி, மிருணாள் காந்திசுங்கோ, பாத்தியாயா, ம.ந. ராமசாமி, சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 119.

*மராத்தி*

55. ஒரு யுகத்தின் முடிவில், ஐராவதி கார்வே, அழகிய சிங்கர், ஓரியண்ட் லாங்மன் லிமிடெட், சென்னை, 232 + 12 (1967ஆம் ஆண்டுக்கான சிறந்த மராத்தி புத்தகம் என்ற பெயர் பெற்றது).

56. பிஹாரி, பச்சன்சிங், என். ஸ்ரீதரன், சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 101.

*மூலம் அறியப்படாதவை*

57. புலனடக்கம், காந்தி, என். ராமரத்தினம், காந்திய இலக்கியச் சங்கம், மதுரை, 160.

58. பெண்ணெனும் படைப்பு _____, க. பஞ்சாங்கம், செல்வன் பதிப்பகம், புதுச்சேரி, 160.

59. ரஷோமான், அகிரா குரோசாவா, தி.சு. சதாசிவம், ஸ்நேகா பதிப்பகம், சென்னை, 124.

*ஆங்கிலம்*

60. சர்வக்ஞர், கே.பி. பிரபு பிரசாத், பட்டு எம். பூபதி, சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 66.

*1995*

*வங்காளம்*

61. இந்திய விஞ்ஞானிகள் முன்னுள்ள சவால் அமுல்யா, கே.என். ரெட்டி, சொ. பிரபாகரன், சவுத் ஏசியன் புக்ஸ், சென்னை, 51.

62. உண்மையைத் தேடி, லீலா ஜார்ஜ், எச். பாலசுப்பிரமணியம், என்.பி.டி., புதுதில்லி, 40.

63. காந்தி தாத்தா கதைகள், உமாசங்கர் ஜோஷி, ந. பாலசுப்பிரமணியன், என்.பி.டி., புதுதில்லி, 34.

64. கௌதமபுத்தர், லீலா ஜார்ஜ், நாகவேணுகோபாலன், என்.பி.டி., புதுதில்லி, _____.

65. நம்மைப் பாதிக்கும் நச்சுக் கழிவுகள், பூவுலகின் நண்பர்கள், சவுத் ஏசியன் புக்ஸ், சென்னை, 51.

66. பங்கிம் சந்திரரின் கட்டுரைகள், பங்கிம் சந்திரர், அமித்ர சூதன் பட்டாச்சாரியா (தொ.ஆ.). சு. கிருஷ்ணமூர்த்தி, என்.பி.டி., இந்தியா, 205.

*1996*

*கன்னடம்*

67. புதைந்த காற்று, (கன்னட தலித் எழுத்துகள்) தெ.மொ.பெ. பாவண்ணன், விடியல் பதிப்பகம், கோவை - 168.

*1997*

*ஆங்கிலம்*

68. ஆல்பெர்காம்யுவிற்கு என் அஞ்சலி, ழான் போல் சார்த்தர், ஸெர்ஜ் தூப்ரோஸ்கி, தேனுகா, அகரம், கும்பகோணம், 32

69. நடுநின்ற நடுவே, எம்.பி. பண்டிட், புதுவை ஞானம், ஞானக் கேணி வெளியீடு, சென்னை, 64.

*இந்தி*

70. வித்யாபதி கண்ட காதற் சுவை, வித்யாபதி, எம். கோவிந்தராஜன், தமிழ் - இந்தி ஒப்பாய்வு மையம், சென்னை, 107.

*1998*

*ஆங்கிலம்*

71. கற்பனை முடிந்து போனது, அருந்ததிராய், எம். சிவகுமார், சவுத் விஷன், சென்னை 32.

*மூலம் அறியப்படாதவை*

72. அடிமைத்தனத்தை இஸ்லாம் அங்கீகரித்ததா, முஹம்மது குதுப், மு. குலாம் முகம்மது, இலக்கியச் சோலை, சென்னை, 61.

73. அவர்கள் எரிகிறார்கள், சியாம் சுந்தர், தலித் அன்பன், புத்தொளிப் பதிப்பகம், சென்னை, 147

74. சமூகச் சிக்கல்களுக்கான ஆய்வுத் தீர்வுகள், யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி, பி. கமலாகரன், வேதாத்திரி பதிப்பகம், ஈரோடு, 136 + 16

75. பார்ப்பனியத்தின் வெற்றி, பி. ஆர். அம்பேத்கார், வெ. கோவிந்த சாமி, அலைகள் வெளியீட்டகம், சென்னை, 140.

76. பேக்கன் முதல் மார்க்ச் வரை, தேவிபிரசாத் சட்டோபாத்யாயா, வசந்தகுமார், நிகழ், கோயமுத்தூர், 64.

77. மனிதன் குரங்கிலிருந்து தோன்றினானா? இஸ்லாத்தின் விளக்கம், பி. ஆயிஷாலெமு, குலாம் முஹம்மது, இலக்கியச் சோலை, சென்னை, 64.

78. மார்க்சியம் - பெண்ணியம் உறவும் முரணும், _____, வெ. கோவிந்தசாமி + நடராஜ், விடியல் பதிப்பகம், கோவை, 240.

*ஆங்கிலம்*

79. ஒரு குட்டிச் சிங்கம் கர்ஜிக்கக் கற்றது. இந்துராணா, கே.ஜே. விவேகன், என்.பி.டி., 24.

80. திராவிடர் கட்டடக் கலை, ழுவோனுப்ருயல், முரளி அருபன், ரிஷபம் பதிப்பகம், சென்னை, 63.

*மலையாளம்*

81. இந்தியாவில் நாகவழிபாடு, ஜி. ரவீந்திரன் நாயர், டி. சிவ ராமன், பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், தகவல் ஒலிபரப்பு அமைச்சகம், இந்திய அரசு, 63.

*மூலம் அறியப்படாதவை*

82. அன்புள்ள டாக்டர் மார்க்ஸ் (சோசலிசம் பெண்ணியலாளரின் கடிதம்) ஷீலா ரௌபாத்தம் , வ. கீதா & எஸ்.வி. ராஜதுரை, விடியல் பதிப்பகம், கோவை, 120.

83. இந்தியாவும் 21ஆம் நூற்றாண்டின் சவால்களும் (நேரு நினைவுச் சொற்பொழிவு), ஜோதிபாசு, என். ராமகிருஷ்ணன், வைகை வெளியீட்டகம், மதுரை, 28.

*1999*

*மூலம் அறியப்படாதவை*

84. புதிய மனிதன் புதிய உலகம், ஆசாரீய மகாபிரக்ய, மா. கோவிந்தராஜன், துளசி மகாபிரக்ய சாகித்திய அக்காதெமி, சென்னை, 284.

***2000***

*பிரெஞ்சு*

85. க்னோக் அல்லது மருத்துவத்தின் வெற்றி, ழூல்ரோமேன், வெ. ஸ்ரீராம், க்ரியா அலியான்ஸ்ஃபிரான்சேஸ், சென்னை, 107.

*மூலம் அறியப்படாதவை*

86. இந்தியாவில் தொழிற்சங்க இயக்கம், சி. பாஸ்கரன், வி.கெ. பாலகிருஷ்ணன், சவுத் விஷன், சென்னை, 6

87. தலித் பிரச்சனை தலித் அல்லாத விமர்சகர்கள் செய்யும் தவறு, சந்திராபான் பிரசாத், ஷீயோராஜ் சிங் பெச்சாய்ன், ஆதவன், தலித், நெய்வேலி, 13.

***2001***

*ஆங்கிலம்*

88. காவிரி, தமிழகம் இழந்து வரும் வரலாறு, முதற்கட்டம், எஸ். கிருஷ்ணசாமி, கலைவேலு, காவிரி காப்புக் குழு, கரூர், 64.

89. வால்மீகி, ஐ. பாண்டுரங்கராவ், சிங்கார வடிவேலன் (எ) அரபி, சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 132

*சீனம்*

90. ஐந்து அரங்குகளில் தேர்வை எதிர்கொள்வோம் சௌ-என்-லாய், _____, கீழைக்காற்று வெளியீட்டகம், சென்னை, 20.

*பிரெஞ்சு*

91. பிரெஞ்சுப் பேரறிஞர் மோந்தேன் சிந்தனைகள், மோந்தேன், சு. நடராஜன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 152.

*மலையாளம்*

92. செங்கல்லும் ஆசாரியும், சக்கரியா, சுரா, புதுமைப்பித்தன் பதிப்பகம், சென்னை, 80.

*மூலம் அறியப்படாதவை*

93. காட்டில் உள்ள வரிகள், கீதிகா ஜெயின், மதன்ராஜ், என்.பி.டி, புதுதில்லி, 16.

94. விடுதலை போராட்டத்தில் பண்பாட்டின் பாத்திரம், அமில்கர் கப்ரால், எஸ். பாலச்சந்திரன், விடியல் பதிப்பகம், கோவை, 32.

95. விமர்சனம் என்னும் மொழி, -, தெ. கலியாணசுந்தரம், வாணி பதிப்பகம், கோவை, 152.

***2002***

***ஆங்கிலம்***

96. இந்தியா 2020 பத்தாயிரம் ஆண்டுகளுக்கான ஒரு தொலை நோக்கு, ஏ.பி.ஜே. அப்துல்கலாம், ய.சு. ராஜன் & நெல்லை சு. முத்து, என்.சி.பி.எச்., சென்னை, 456 + 22 + 1

97. எமர்சன் கட்டுரைகள், எமர்சன், ரா. நாராயணன், சந்தியா பதிப்பகம், சென்னை, 127.

98. எழுச்சி தீபங்கள், ஏ.பி.ஜெ. அப்துல்கலாம், மு. சிவலிங்கம், கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, 224.

99. தேவதாசி மரபு, பி.எம். சுந்தரம், இரா. சுப்பராயலு, மருதம் பதிப்பகம், ஒரத்தநாடு, 72.

***கன்னடம்***

100. அனுபவங்கள் தந்த பாடங்கள், சுதாமூர்த்தி, சாருகேசி, கலைஞன் பதிப்பகம், சென்னை, 240.

***மூலம் அறியப்படாதவை***

101. காந்தியடிகளின் கட்டுரைகள், காந்தி, த. சித்ரா, சித்திர வண்ண வாசல், சென்னை, 136.

102. குஜராத் 2002 அர்த்தங்களும் உள்ளார்த்தங்களும், அ. மார்க்ஸ், அடையாளம், புத்தாநந்தம், 240.

***2003***

***ஆங்கிலம்***

103. உணவு, காந்தி, ரா. வேங்கடராஜுலு, காந்தி இலக்கியச் சங்கம், காந்தி மியூசியம், மதுரை, 129

104. உழைப்பை ஒழிப்போம், பால்லஃபார்க், வளர்மதி, பாப் பிளாக், அடையாளம், சென்னை, 80.

105. குறளின் பிசாசின் மறு அவதாரம், அருந்ததிராய், வெ. ஜீவானந்தம், சோக்கோ வாசகர் வட்டம், மதுரை. -

106. சில மாறுபட்ட சிந்தனைகள், வில்லியம் பிளேக், நலங்கிள்ளி, இரவிக்குமார் பதிப்பகம், சென்னை, 136.

107. சிறைச்சாலை என்ன செய்யும், ஆஸ்கர் ஒயில்ட், வி.ஆர்.எம். செட்டியார், வ.உ.சி. பதிப்பகம், சென்னை, 32.

108. பகவான் ரமணர், டி.எம்.பி. மகாதேவன், லா.சு. ரங்கராஜன், (நா.ப. 2003), ஸ்ரீரமணாச்ரமம், திருவண்ணாமலை, 24.

109. பேரின்பச் சோலை, ஜேம்ஸ் ஆலன், கா. அப்பாத்துரை, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 288.

110. மதம் என்பது என்ன? ராபர்ட் கிரீன் இங்கர்சால், நலங்கிள்ளி, இரவிக்குமார் பதிப்பகம், சென்னை, 160.

*இந்தி*

111. இந்தியாவின் மதச் சார்பின்மை, ஸீதாராம் கோயல், குருக்ருபா, கலா சம்ரஷண சங்கம், தஞ்சாவூர், 160.

*பிரெஞ்சு*

112. உலகம் மாற வேண்டும், எம்.என். ராய், சாம்பசிவம், வ.உ.சி. பதிப்பகம், சென்னை, 64.

113. தமிழகக் கல்வெட்டுகளில் பெண்கள், சி.ஆர். லெஸ்லி, வி. நடராஜன், விடியல் பதிப்பகம், கோவை, 63.

114. தலித் அரசியலும் மார்க்சியமும் ஒரு புரிதலை நோக்கி, அரவிந்த், வெ. கோவிந்தசாமி, விடியல் பதிப்பகம், கோவை, 71.

115. பயங்கரவாதம் அகமும் புறமும், ழான் போத்ரியன், எம். கண்ணன், விடியல் பதிப்பகம், கோவை, 46.

*வங்காளம்*

116. அமராஞ்சலி, தாகூர், அமரன், காவ்யா பதிப்பகம், சென்னை, 264.

117. மீடியா அரசியல், பிரபாத் பட்நாயக், சாமி, பாரதி புத்தகாலயம், சென்னை, 29.

118. வேலூர்க் கலகம், ஜூலை 1806, மாயாகுப்தா, வி. நடராஜ், விடியல் பதிப்பகம், கோவை, 32.

*2004*

*ஆங்கிலம்*

119. ஆசிரியர்களுக்குப் புதிய இந்தியாவை உருவாக்குவதில் ஆசிரியர்களின் பங்கும் பொறுப்பும், ரங்கநாதானந்தர், அவபோதானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை, 47.

120. சேகுவேரா என்ற புரட்சிக்காரன் உருவான கதை, அல்பெர்டோகிரன்டோ, ஜி. குப்புசாமி, வ.உ.சி. பதிப்பகம், சென்னை, 231.

121. தலித் விடுதலையும் கிறித்துவமும், வி.பி. ராஜசேகர், அரச முருகுபாண்டியன், அமுதம் வெளியீட்டகம், மதுரை, 38.

122. மகாத்மா சில பார்வைகள், ____, நா. தர்மராஜன், சுரா புக்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 154

123. மரணத்திற்குப் பின்னால், வி.ஆர். கிருஷ்ணஐயர், இர.சு.முத்து, சுரா புக்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 22.

*மலையாளம்*

124. மதமும் பகுத்தறிவும், யுக்தி தர்ஷன், த. அமலா, சூலூர் வெளியீட்டகம், கோவை, 190.

*மூலம் அறியப்படாதவை*

125. சாவுக்கே சவால், விளாதிஸ்லாவ்தித்தோவ், பூ. சோமசுந்தரம், பாரதி புக் ஹவுஸ், மதுரை, 166.

126. பந்தயம், ஆண்டன் செகாவ், இளம்பாரதி, பாரதி புக் ஹவுஸ், மதுரை, 94.

127. பெருவழியம்பலம் நெடும்பாதைச் சத்திரம், பி. பத்மராஜன், மீரா கதிரவன், கனவுப் பட்டறை, சென்னை, 128.

128. மில்டனின் அற்புதப் படைப்பு, அரியோபேஜிடிக்கா, பழ. மணி, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 128.

129. மோகத்தீ, எம். முகுந்தன், சுரா, ராம்பிரசாந்த் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 75.

130. ரஷ்யா, எம். முகுந்தன், சுரா, ராம் பிரசாந்த், சென்னை, 96.

131. ரானடே - காந்தி - ஜின்னா, அம்பேத்கார் பி.ஆர்., கு. சுப்பிரமணியன், புத்தா வெளியீட்டகம், கோவை, 56.

***2005***

*ஆங்கிலம்*

132. ஏழு தலைமுறைகள், அலெக்ஸிஹேலி, ஏ.ஜி. எத்திராஜுலு, இந்திய ஜனநாயக வாலிபர் சங்கம், சவுத் விஷன், சென்னை, (1993, மு.ப., 2005 மூ.ப.), 336.

133. கார்க்கி கட்டுரைகள், மாக்ஸிம் கார்க்கி, வல்லிக்கண்ணன், என்.சி.பி.எச்., சென்னை, 112.

134. காலம் ஒரு வரலாற்றுச் சுருக்கம், ஸ்டீஃபன்ஹாக்கிங், நலங்கிள்ளி, உலகத் தமிழ் மொழி அறக்கட்டளை, அமெரிக்கா, 295.

135. மகாத்மா சில பார்வைகள் (க.தொகுப்பு), _____, நா. தர்மராஜன், சுரா புக்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 154.

136. மனிதனின் முழுமை ஒரு ஞானச்சுடர் விளக்கம். ஹப்மோன் பணிக்கர், வை.அ. பொன்னையா, வைகறைப் பதிப்பகம், திண்டுக்கல், 347 + 16.

*கன்னடம்*

137. ஒரு வேட்டைக்காரனின் நினைவலைகள், கேடம்பாடி ஜட்டப்பராய், ஜெயசாந்தி, என்.பி.டி., இந்தியா, 111.

*மராத்தி*

138. ஜோதிராவ் பூலே சமூக சீர்திருத்தத்தின் தந்தை, ஜி.பி. தேஷ்பாண்டே, ச. கவிதா, பாரதி புத்தகாலயம், சென்னை, 24.

139. ஜோதிராவ் பூலேயின் தேர்வு செய்யப்பட்ட படைப்புகள், ஜி.பி. தேஷ்பாண்டே, ச. கவிதா, பாரதி புத்தகாலயம், சென்னை, 334.

*மலையாளம்*

140. காரல் மார்க்ஸ் புதுயுகத்தின் வழிகாட்டி, இ.எம்.எஸ். நம்பூதிரிபாட், பி.ஆர். பரமேஸ்வரன், பாரதி புத்தகாலயம், சென்னை, 32.

141. கிராம்ஷியின் சிந்தனைப் புரட்சி, இ.எம்.எஸ். நம்பூதிரிபாட், கோவிந்தபிள்ளை & வி.கே. பாலகிருஷ்ணன், பாரதி புத்தகாலயம், சென்னை, 104.

142. தடைகளைத் தாண்டி, (சமூக மாற்றத்தில் பெண் போராளிகள்), பார்வதி மேனன், ஆர். சந்திரா, இந்திய மாணவர் சங்கம், பாரதி புத்தகாலயம், சென்னை, 64.

*ரஷ்யா*

143. இரட்டை வாக்குரிமை, க. பீம்ராவ், _____, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, சென்னை, 120.

144. எங்கள் ஒரு நாள் குடும்ப வாழ்க்கை, ஜென்னி மார்க்ஸ், -, என்.சி.பி.எச்., சென்னை, 51.

145. எனது இந்தியா, ஜிம் கார்பெட், யுவன் சந்திரசேகரர், காலச்சுவடு பதிப்பகம், 227.

146. கம்யூனிஸ்ட் கட்சியும் ஸ்தாபனமும், அனில் பிஸ்வாஸ், எஸ்.ஏ. மாணிக்கம், பாரதி புத்தகாலயம், சென்னை, 24.

147. கவிதையும் நீதியும், சுகதகுமாரியுடன் ஓர் நேர்காணல், விஜயலட்சுமி, கே.வி. ஜெயஸ்ரீ, பாரதி புத்தகாலயம் & வம்சி புக்ஸ், சென்னை, 47.

148. குடிசையில் தான் மானுடம் வசிக்கிறது, ஒரு குடிசையிலிருந்து இராவணன், ஜீவசகாப்தன், -, மதுரை, 32.

149. சமூக, பண்பாட்டு மானுடவியல், மிகச் சுருக்கமான அறிமுகம், ஜான் மோகனன், & பீட்டர் ஜஸ்ட், பக்தவத்சல பாரதி, அடையாளம் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 224.

150. சிலந்தியும் ஈயும், வில்ஹெல்ம்லீப்னெவர்ட், இரா. கிருஷ்ணையா, பாரதி புத்தகாலயம், சென்னை, 14.

151. செர்ஜி ஐன்ஸ்டினின் பேட்டில்ஷிப், பொட்டம்கின் & அ. ஐ. கான் பொட்டம்கின், கலைச் செல்வன், நிழல் பதிப்பகம், சென்னை, 184

152. நல்லது என்றால் என்ன? கெட்டது என்றால் என்ன? விளாதிமீர் மயாக்கோவ்ஸ்கி, பூ. சோமசுந்தரம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 151.

153. மார்க்சியமும் கலாச்சாரப் பணியும், நாராயண் சுர்வே, கமலாலயன், பாரதி புத்தகாலயம், சென்னை, 16.

154. வாருங்கள் சுற்றிப் பார்ப்போம். சோவியத் நாட்டை, செல்கேய் பருஸ்தீன், யு. கரோசன், வ. சண்முகசுந்தரம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 30

*வங்காளம்*

155. உலகமயமாக்கல் சகாப்தத்தில் கலாச்சாரம், சீதாராம் ஹெச் சூரி, எஃப்.எம்.கே., பாரதி புத்தகாலயம், சென்னை, 16.

156. நான் நாத்திகன் ஏன்? பகத்சிங், ப. ஜீவானந்தம், பாரதி புத்தகாலயம், சென்னை, 24.

157. பஞ்சாயத்தும் கிராமப்புற வறுமை ஒழிப்பதும் மேற்கு வங்க அனுபவம், சூரிய காந்தமிஸ்ரா, கி. இலக்குவன், பாரதி புத்தகாலயம், சென்னை, 16.

158. பணம் சம்பாதிக்கும் பொன்னான வழிகள், பி.டி. பர்னம், கோடீஸ்வரன், கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, 80.

*மூலம் அறியப்படாதவை*


159. மார்க்சிய பார்வையில் டாக்டர் அம்பேத்கர், பி.பி. சான்ஸ்கிரி, சார்வாகன், பாரதி புத்தகாலயம், சென்னை, 40.

160. முஸ்லீம்களின் அரசியல் பரிணாம வளர்ச்சி, ஜே.பி.பி. மோரே, சு. கிருஷ்ணமூர்த்தி, அடையாளம் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 251.

161. லெனினின் ஏகாதிபத்தியம் ஓர் அறிமுகம், பிரபாத் பட்நாயக், விஜயராகவன், பாரதி புத்தகாலயம், சென்னை, 48.

162. ஜனநாயக எழுச்சிக்களின் நூற்றாண்டு, அய்ஜாஸ் அகமது சஹல், பாரதி புத்தகாலயம், சென்னை, 16.

163. ஜனநாயகம் வர்க்கப் போராட்டத்திற்கான களம், பிரபாத் பட்நாயக், விஜயராகவன், பாரதி புத்தகாலயம், சென்னை, 32.

164. ஸ்தாபனத்தைப் பற்றி, ஸ்டாலின், வீ.பா. கணேசன், பாரதி புத்தகாலயம், சென்னை, 24.

165. 20-ம் நூற்றாண்டு அரசியலில் இந்தியா, அய்ஜாஸ் அகமது, சஹல், பாரதி புத்தகாலயம், சென்னை, 16.

166. 1857 எழுச்சி, இர்ஃபான் ஹபீப், அ. குமரேசன், பாரதி புத்தகாலயம், சென்னை, 16.

167. 150 ஆண்டுகளுக்குப் பிறகு கம்யூனிஸ்ட் அறிக்கை, பிரபாத் பட்நாயக், விஜயராகவன், பாரதி புத்தகாலயம், சென்னை, 32.


*ஆண்டு அறியப்படாதவை*

*ஆங்கிலம்*


168. எது இந்து தர்மம்? காந்தி, பழனி அரங்கசாமி, ____, ____, ____.

169. ஒரு நிமிடம் ஒரு மரணம் (காசநோய் பற்றிய ஓர் விளக்கம்) ராமன்கக்கர், வி.என். ராகவன், பாரதி புத்தகாலயம், சென்னை, 90.

170. ஒன்று, இரண்டு, மூன்று, ____, ____, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 15.

171. சிந்தனைச் சோலை, ஸ்யாத்வாமதி மாதாஜி, A. சிம்மசந்திர ஜைன் சாஸ்திரியார், சம்யா பிரச்சார சங்கம், சென்னை, 18.

172. செஞ்சிலுவைச் சங்கத்தின் கதை, கிருஷ்ண சத்தியானந்த், ஜ. தியாகராஜன், என்.பி.டி., புதுதில்லி, 64.

173. தண்ணீர், ராமா, ருத்ர துளசிதாஸ், என்.பி.டி., புதுதில்லி, 64.

*வங்காளம்*

174. தன் வெளிப்பாடு, சுநீல் கங்கோபாத்தியாய், சு. கிருஷ்ணமூர்த்தி, _____, _____, 194.

175. நாக்பூர் தலித் மக்களின் போராட்ட வாழ்க்கை, வசந்த் மூன், வெ. கோவிந்தசாமி, புத்தர் பாசறை, திருச்சி, 40.

176. மதவெறிக்கு எதிராக, பூவுலகின் நண்பர்கள், இந்திய தேசிய சமூக செயல்பாட்டு இயக்கம், சென்னை, 24.

177. மனிதனின் கடமை, கே.ஆர்.கேபட், -, டாஸ்பிரஸ், நாகர்கோவில், 12.

178. மார்க்சியத்துவமும் அரசியல் பொருளாதாரம், எப்எம், குத்புதீன், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, சென்னை, 57

*மூலமும் ஆண்டும் அறியப்படாதவை*

179. அம்பேத்கருக்குப் பிந்தைய தலித் இயக்கங்கள், ஆனந்த் டெல்கும்ப்டே, மயிலை பாலு, அலைகள் வெளியீட்டகம், சென்னை, 96.

180. ஆதிவாசிகள் குறித்த ஆணைக்குழு எண் அறிக்கை, பூவுலகின் நண்பர்கள், இந்திய தேசிய சமூக செயல்பாட்டு இயக்கம், சென்னை, 17.

181. இட ஒதுக்கீடு ஏன்? வி.ஆர். கிருஷ்ணய்யர், வேம்படிதாளம், பெ. சுந்தரம், தலித் விடுதலைக் கல்வி அறக்கட்டளை, சென்னை, 142.

182. இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கம் ஒரு வரலாற்றுச் சுருக்கம், _____, கே. அறம், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, சென்னை, 30.

183. இந்து முஸ்லீம் ஒற்றுமை, காந்தி, வெ.ஜீவானந்தம், சோக்கோ அறக்கட்டளை, மதுரை, 75.

184. சியாட்டிலில் நடந்தது என்ன? -, அ.ஜ.கான், தாமரைச் செல்வி பதிப்பகம், சென்னை, 32.

185. மார்க்சிஸ்ட் கட்சியின் நடைமுறைத் தந்திரம், வீ.பா. கணேசன், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, சென்னை, 106.

# கவிதை

*1980*

*அரபு*

186. தீர்க்கதரிசி, கலீல் ஜிப்ரான், நலங்கிள்ளி, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, -.

*1981*

*தெலுங்கு*

187. வீணையே வாளாக, _____, என்.ஆர். தாசன், கார்க்கி நூலகம், சென்னை, 72.

*பிராகிருதம்*

188. காதாசப்தகதி (பா. எழுநூறு), _____, மு.கு. ஜகந்நாதராஜா, விசுவசாந்தி பதிப்பகம், இராஜபாளையம், 396.

*மூலம் அறியப்படாதவை*

189. சோசலிசக் கவிதைகள் -, குமரன், இளங்கோ & மருதமுத்து, சூரியப்பன் & இன்குலாப். மக்கள் கலாச்சாரக் கழகம், தமிழ்நாடு, 136

*ஸ்பானிஷ்*

190. சேகுவேரா கவிதைகள், சேகுவேரா, மொலீனா, தேன்மொழி மற்றும் யமுனா ராஜேந்திரன், வெளிச்சம் வெளியீடு, கோவை, _____.

*1982*

*மூலம் அறியப்படாதவை*

191. அறைக்குள் வந்த அமெரிக்க வானம், -, இந்திரன், அன்னம் பி. (லிட்.), சிவகங்கை, 141.

*1983*

*ஆங்கிலம்*

192. ஆகமன், மகாகவி, அ.க. ஆதித்தர், சாந்தி டிரஸ்ட் வெளியீடு, கோவை, 158.

*1984*

*பல்கேரியா*

193. பல்கேரியக் கவிதைகள், -, கே. கணேஷ், என்.சி.பி.எச்., சென்னை 120

*வங்காளம்*

194. இரவீந்திரநாத் தாகூரின் கீதாஞ்சலி, தாகூர், பா. வரதராசன், வித்துவான் பா. வரதராசன் அனுசுயா தேவி அறக்கட்டளை, _____, (ம.ப. 2002), _____.

*1985*

*அரபு*

195. கலீல் ஜிப்ரான் கவிதைகள், கலீல் ஜிப்ரான், என்.ஆர். தாசன், ரசனா புக் ஹவுஸ், சென்னை, 80.

*ஆங்கிலம்*

196. கமலாதாஸின் காதல் கவிதைகள், கமலாதாஸ், கன்யா, கனிமுத்துப் பதிப்பகம், சென்னை, 84.

*ரஷ்யா*

197. எத்தொழிலை நான் தேர்ந்தெடுப்பேன், விளாதிமீர் மாயகோவ்ஸ்கி, நா. தர்மராஜன், ராதுகா பதிப்பகம், மாஸ்கோ, _____.

198. அக்கினிச்சுவடுகள், தராசுஷெவ்சேன்கோ, கா. சுப்பிரமணியன், சங்கரானந்தா பதிப்பகம், தென்காசி, 48

199. தராசு செவ்சேன்கோ கவிதைகள், தராசுஷெவ்சேன்கோ வா.மு. சேதுராமன், கவியரசன் பதிப்பகம், சென்னை, 128.

200. நாளையின் அடையாளம், _____, இரா. மதிவாணன், விஜயா பதிப்பகம், கோயம்புத்தூர், 96.

*ஆங்கிலம்*

201. புல்லின் இதழ்கள், வால்ட்விட்மன், நலங்கிள்ளி, கலைஞன் பதிப்பகம், சென்னை, 116.

202. வால்ட்விட்மன் கவிதைகள், வால்ட்விட்மன், நலங்கிள்ளி, கலைஞன் பதிப்பகம், சென்னை, 116.

*1986*

*வங்காளம்*

203. காதற்பரிசு, தாகூர், பேகனார், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 84 + 8.

*1987*

*ஆங்கிலம்*

204. பாரதி கவிதைகள், பாரதி, டி.பி. விஜேந்திரன், ---, ---, 30.

*1987*

*ரஷ்யா*

205. கதெரீனா, தராசு ஷெவ்சேன்கோ, நா. முகம்மது செரீபு, என்.சி.பி.எச்., சென்னை, 44.

206. நேசத்திற்காக உக்ரேனிய மகாகவி தராசு ஷெவ்சேன்கோ, ---, ---, சங்கரானந்தா பதிப்பகம், தென்காசி, ---.

*வங்காளம்*

207. தாகூரின் கீதாஞ்சலி, தாகூர், தஞ்சை கோ. நடராஜப்பிள்ளை, திருக்குறள் பதிப்பகம், சென்னை, 160.

*1988*

*அரபு*

208. கண்ணீரும் புன்னகையும், கலீல் ஜிப்ரான், ஆ.மா. சகதீசன், சூரியன் பதிப்பகம், சென்னை, 119.

*ஆங்கிலம்*

209. மன்னியுங்கள், ஹஸ்முக்படேல், இந்துவரதன், இண்டர்நேஷனல் பிரிண்டர்ஸ், சென்னை, 68.

*இந்தி*

210. கபீர் தாசரின் கவிமலர்கள், கபீர்தாசர், சேலம் அன்பரசு, விஜயம் பதிப்பகம், சேலம், 120.

*வங்காளம்*

211. உனது தாய்நாடு இங்கே கிடக்கிறது, பிரேந்தி சட்டோ பாத்யாயா, கலைச்செல்வம் (கோ.சடை & பராசு & கோவேந்தன், கரும்பாயிரம், அன்னம் (பி) லிட். சிவகங்கை, 80.

212. தாகூரின் கீதாஞ்சலி, தாகூர், தஞ்சை கோ. நடராஜப்பிள்ளை, திருக்குறள் பதிப்பகம், சென்னை, 160.

*ஜப்பான்*

213. ஜென் கவிதைகள் (தொகுப்பு), ப. சுப்பிரமணியன், -, சுந்தர நிலையம், சென்னை, ---.

*மூலம் அறியப்படாதவை*

214. சோவியத் காதல் கவிதைகள், -, இரா. மதிவாணன், விஜயா பதிப்பகம், கோவை, 106.

*1989*

*அரபு*

215. கலீல் ஜிப்ரானின் செல்மாகராமி, கலீல் ஜிப்ரான், ப. லோகநாதன், ---, ஊட்டி, ---.

*உருது*

216. உருதுக்கவிஞர் கவிக்குயில் காலிப்பின் கவிதைகள், காலிப், டி.ஆர். ஸ்ரீனிவாசரெங்கன், ஹிந்தி வித்யாபவன் சமிதி, தூத்துக்குடி, 149

*ரஷ்யா*

217. அன்னா அக்மதோவா, -, எஸ்.வி. ராஜதுரை & வ. கீதா, வயல், மயிலாப்பூர், 56.

218. கொஸ்தா கெதகூரொவ் கவிதைகள், கொஸ்தா, நா. முகம்மது செரீபு & கா. செல்லப்பன், என்.சி.பி.எச்., சென்னை, 91.

*வங்காளம்*

219. தாகூரின் கீதாஞ்சலி, தாகூர், ப. லோகநாதன், ப. லோகநாதன், ஊட்டி, 462.

*மூலம் அறியப்படாதவை*

220. உலகக் கவிதை, பிரம்மராஜன் (தொ.ஆ.) மீட்சி தன்யா மற்றும் பிரம்மா, ---, ஊட்டி, ---.

221. வேமன் சொல், -, கி. மாநிலன், முகில் பதிப்பகம், சென்னை, 176.

*1990*

*ஆங்கிலம்*

222. ஆங்கில அமெரிக்கக் கவிதைகள், -, ஜி. எத்திராஜ், பொன்முடி பதிப்பகம், காரைக்குடி, 110.

*உருது*

223. உதிர் இலைகள், காலிப், நீலமணி & டி. அரசு, ---, சென்னை, 68.

*மலையாளம்*

224. குஞ்ஞுண்ணி கவிதைகள், குஞ்ஞுண்ணி, பா. அனந்தகுமார், மகிழகம், மதுரை, 146.

225. குமரன் ஆசான் மூன்று கவிதைகள், குமரன் ஆசான், இராம. கோபிநாதன், சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 120.

226. தற்கால மலையாளக் கவிதைகள், -, ஜெயமோகன் & ஆல்பா ஆர்த்தி பிரிண்டர்ஸ், திருப்பூர், 76.

*மூலம் அறியப்படாதவை*

227. சோசலிஸக் கவிதைகள், ---, குமரன், ஸ்ரீ மக்கள் கலாச்சாரக் கழகம், சென்னை.

*1991*

*ஆங்கிலம்*

228. மானிட மாண்பு, ---, கவிஞர் ப. முத்துசாமி, சிவிகைப் பதிப்பகம், சேலம், 168.

229. மிளகுக் கொடிகள், ---, வி.எஸ். அனில்குமார், பாரதிபுத்திரன், அன்னம் (பி). லிட்., சிவகங்கை 160

*மூலம் அறியப்படாதவை*

230. மண்ணும் சொல்லும் மூன்றாம் உலகக் கவிதைகள், ---, எஸ். வி. ராஜதுரை, வ. கீதா, அன்னம் (பி.) லிட், சிவகங்கை, 160.

*1992*

*வங்காளம்*

231. மௌன இமாலயமும் அமைதி ஆல்ப்ஸும், ஜகன்னாத சக்கரவர்த்தி, சீதாலக்ஷ்மி விஸ்வநாத், தாகம் பதிப்பகம், சென்னை, 108.

*மூலம் அறியப்படாதவை*

232. வித்யாபதியன் கவிதைக் காவியம், வித்யாபதி, அ. மதியழகன், தியாகராயா பிரசுரம், சென்னை, 100

*1993*

*உருது*

233. காலிப் கவிதைகள், காலிப், மேகநாதன், தஞ்சாவூர் சான்றோர் பதிப்பகம், சென்னை, 100.

